ஸ்ரீ

# ராமலீலை

இது

ஹைகோர்ட்டு வக்கீல்

**வீ. வீ. தேவநாத ஐயங்கார்**

இயற்றியது



சென்னை:

எஸ். வைத்யா கம்பெனியாரால்

பிரசுரிக்கப்பெற்றது

1917

ஸ்ரீ

## கடவுள் வணக்கம்

உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்,
நிலைபெ றுத்தலும், நீக்கலும், நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யார்; அவர்
தலைவர், அன்னவர்க் கேசரண் நாங்களே.

ஸ்ரீ

# ராமலீலை

## முதல் அங்கம்

### முதல் காட்சி

(ஜனகர் அரண்மனை. ராவணனும் ப்ரஹஸ்தனும் வருகின்றார்கள்.)

ராவ. ராமணீயகமே ஸீதை! ஸீதையே ராமணீயகம்! ச்ருஷ்டித் தொழிலில் தன் ஸாமர்த்யஸாகரத்தின் ஆழத்தை அறியும் பொருட்டு ப்ரஹ்மன் இவளை ச்ருஷ்டித்தான்போலும். ஒரு வேளை ப்ரஹ்மன் கர்வத்தை அடக்கி அவனுக்கு வேலையைக் கற்றுக்கொடுக்க ஸ்ரீமந்நாராயணன் இவளை ச்ருஷ்டித்திருக்கக் கூடும். ப்ரஹஸ்தா! சைவசிரோமணியாகிய என் வரவை ஜனகனுக்கு அறிவித்திடு.

ப்ர.
இருகையாற் சிரமறுக்கி இயற்றிய யாகத் தீயில்
தருகையாற் சிவனு மேத்துந் தசமுகன் வேத னுக்குப்
பெருகையந் தீர வேதப் பெருமையை யெடுத்து ரைப்போன்
வருகையைச் சென்று நீயும் மன்னனுக் கியம்பு வீரே!

ராவ. ப்ரஹஸ்தா! பார்த்தாயா இன்னும் வரக்காணோம் அச்சனகன். ஸீதையின்பொருட்டு எவ்வளவு அவமானங்களைப் பொறுக்க வேண்டியிருக்கின்றது. ஆனால் அம்மாதரசியின்பொருட்டு என் உயிரையும்விடச் சித்தமாயிருக்கின்றேன். மற்றொருமுறை நம் வரவை அறிவிப்பாய்

ப்ர.
மலையெடுத்த நெடுந்தோளான் வானவரை
மன்னரொடு மலைந்த போரில்
அலையெடுத்த அணிநகரில் சிறைவைத்தோன்
அயன்றனையு மடிமை கொண்டோன்

கொலையெடுத்த போரினில்வென் றேந்திழையைக்
கொண்டேகுங் குணத்தா னேனும்
சிலையெடுத்துத் தோள்வலியாற் சீதையெனும்
மெல்லியலைச் சேர்வான் வந்தான்.

ராவ. நன்றுரைத்தாய் ப்ரஹஸ்தா! நன்றுரைத்தாய்!

(ஜனகரும் சதானந்தரும் வருகின்றார்கள்.)

ஜன. வானவர் போற்றும் வீரனே வருக. ஏது தாம் இவ்வளவு ப்ரயாசமெடுத்துக்கொண்டு இங்கு வந்தது?

ப்ர. ஜனகா! ஆகாயமார்க்கமாய் விமானத்தில் செல்லும்போது, ஸீதையின் ஸ்வயம்வரத்தைப்பற்றிக் கேள்வியுற்று, த்ரிபுரதஹ னுடம்பரம்செய்த பரமேச்வரன் அமரர்கள் பலத்தையெல்லாம் ஒன்றுசேர்த்துச் சிருஷ்டித்த வில்லை ஒடித்து ஸீதையை எடுத் துச்செல்லத் தசக்ரீவர் வந்திருக்கின்றார்.

ஜன. தசானன மகாராஜா! தூர்ஜ்ஜடி தனுராரோபணம் செய்ய அனேக மன்னர்கள் வந்திருக்கின்றார்கள். நாளை உதயம் எல் லோரும் கொலுமண்டபத்தில் கூடித் தங்கள் புஜபராக்கிரம பரிசோதனை செய்யப்போகின்றார்கள். தாமும் அப்பொழுது எல்லோர் முன்னிலும் சுல்கதானத்தை அங்கீகரித்து ஸீதையை ஏற்றுக்கொள்ளலாம்.

ராவ. என்ன உரைத்தாய் தபோதன ஜனகா? எல்லோர் முன்னுமா என் பராக்கிரமத்தைப் பரிசோதிக்கவேண்டும்? உதயம் வரை யில் காத்திருப்பது அசாத்யம். சிவதனுவைக் கொண்டு வரச் சொல். இந்த க்ஷணமே அதை ஒடித்துத் தரணிஸுதையை எடுத்துச் செல்வேன்.

(ஜனகர் ஏதோ யோசிக்கின்றார்.)

சதா. (ஆத்மகதமாய்) என்ன ஆச்சர்யம்! என்ன ஆச்சர்யம்! உலகத் தில் ஸத்குணமே உருவெடுத்து வந்தவனாயிருந்தாலும், ஒரு வனுக்குத் தன் குற்றத்தினாலன்றிப் பிறப்பினாலாவது சாபத்தி னாலாவது ஏற்பட்ட அழிக்க முடியாத களங்கம் காரணமின்றி அவனைக் குற்றவாளியாக்குகின்றது. கால்மாற்றுக் கலப்பிருந் தாலும் தங்கத்தின் குணம் தாழ்ந்துவிடுகின்றதல்லவா. ப்ரஹ்ம

குலத்தில் பிறப்பும் லங்கையெனும் திவ்யபுரியில் இருப்பும் பெற்று, இந்திராதி தேவர்களெல்லாம் பணிவிடை புரியச் சதுர்முகனுக்கே ஐயந்திர வேதங்களை அறிவிக்கக்கூடியவனும் யுத்தத்தில் ஈரேழுலகத்தையும் அழிக்கக்கூடியவனும் நிகரில்லாத சிவபக்தனுமாகிய இவனுக்கு ராவணனென்னும் பெயர் மட்டும் இல்லாதிருந்தால் இவன் கோரக்கூடிய வரனேயாவான்!

ராவ. ஜனகா! என்ன ஆலோசிக்கின்றாய்?

ஜன. ஒன்றுமில்லை. (ஆத்மகதமாய்) லங்கேசா த்பவ! நீர்தாம் உமது வில்லைக் காக்கவேண்டும்.

ராவ. ப்ரஹஸ்தா! எனக்கொரு நற்சகுனம் வாய்ந்தது. திடீரென்று என் வலத்தோள் துடித்தது. இவ்வில்லின் மூலமாய் எனக்கு வாய்க்கக்கூடிய நற்கதி ஸீதையினுடைய கருணைகடாக்ஷமன்றி வேறொன்றும் எனக்குப் புலப்படவில்லை. ஜனகா! வில்லெங்கே?

ஜன. தசானன! இதோ இருக்கின்றது சிவதனுஸ்.

ராவ. வில்லிருக்கின்றது வாஸ்தவமே. ஆனால், மணமாலையுடன் மங்கையேன் வரவில்லை?

சதா. அதற்கென்ன அவசரம்? வில்லை எடுத்து நாணேற்றினால் மெல்லியள் தானே வருகின்றாள்.

ராவ. என்ன ஒன்றுமறியாதவன்போல் உளறுகின்றாய்? மங்கை மணமாலையோடு வில்லுடனேயன்றோ வரவேண்டும்.

ஜன. யாரங்கு, அந்தப்புரத்திற்குச்சென்று குழந்தையை அழைத்து வாருங்கள்.

ராவ. (ஆத்மகதமாய்) ஸீதை வரப்போகின்றாள், அவளுடைய அழகெனும் அம்ருதத்தை நமது இருகண்களாற் பருகப் போகின்றோம். ஈரைந்து தலைகளோடு கூடிய என் ராக்ஷஸ உருவத்தை உள்ளபடியே எடுத்து எனது இருபது கண்களாலும் என் அம்ருதபானம் செய்யலாகாது............ஆனால், ஒரு வேளை மானிடஸ்த்ரீயாதலால் என் தசகண்டங்களையும் பார்த்துப் பயந்து விடலாம்! ஹ்ருதயமே! சற்றுப் பொறுத்துக்கொள்.

(ஸீதையும் ஓர் தாதியும் வருகின்றார்கள்.)

ஸீதை. ராக்ஷஸன் என்று கேள்வியுற்று அவனைப் பார்க்கவேண்டுமென்கிற ஆவலும், எங்கு வில்லை ஒடித்து நம்மை மணக்கின்றானோ என்கிற பயமும் ஒன்றோடொன்று போர்புரிந்து என் மனத்தை ஸங்கடப்படுத்துகின்றன.

தாதி. ஸாதாரண ராக்ஷஸனென்று அவமதிக்காதே. ப்ரஹ்மாதி தேவர்களையெல்லாம் அடக்கியாளும் அரக்கர் மன்னன் உன்னை மணக்க வந்திருப்பவன்.

ஸீதை. எவனாயிருந்தால் எனக்கென்ன? ராக்ஷஸன் ராக்ஷஸன் தானே. ஜகதீசா! என்னை எப்படியாவது இவ்வரக்கன் கையில் சிக்காமல் காக்கவேண்டும்!

தாதி. நீ எதற்கும் அஞ்சவேண்டாம். சிவன் வில்லை அவரது அனுக்ரஹம் இன்றி ஆரோபணம் செய்வது அசாத்யம்.

சதா. புலஸ்த்யநந்தனா! இதோ சிவதனுஸ், அதோ ஸீதை.

ராவ. சதாநந்தா! அதோ சிவதனுஸ், இதோ ராவணன். புத்ரமித்ர பார்வதீ ஸமேதனாய்ச் சிவன் வீற்றிருக்கும் கைலயங்கிரியைப் பெயர்த்தெடுத்த எனக்கு இவ்வற்பவில் எவ்வளவு? இதில் அமரர்கள் பலம் அடங்கியிருந்தாலென்ன? அவ்வமரர்களே என் வேலையாட்களல்லவோ?

சதா. (ஆத்மகதமாய்) ஹா ஹா! எவ்வளவு கர்வத்தை அடைந்திருக்கின்றான்! குணவானாயினும் கர்வத்தை அடைந்தவனுக்கு அழிவு அருகிலேயே இருக்கும் என்பதை மறந்திருக்கிறான்.

ஜன. (ஆத்மகதமாய்) மஹேச்வரா! உம்முடைய தனுஸை நீர் எப்படியாவது காக்கவேண்டும். த்ரிலோகஜிதனாயிருந்தாலும் ஸீதாபதியாகும் யோக்யதை இவ்வரக்கனுக்கு உண்டோ?

ஸீதை. (ஆத்மகதமாய்) அப்பா! நீ தயைபுரிந்து என்னருகில் இருக்கவேண்டும்.

ராவ. (வில்லைக் கையில் எடுத்துக்கொண்டு) ஏதோ சிவதனுஸ் என்று எண்ணினேன். க்ஷத்ரியப்பதர்கள் உபயோகிக்கும் அற்பதனுசுகளைவிட இஃது அதிஸுலபமாய் எடுக்கத்தக்கதாய் இருக்கின்றது! இதையோ எல்லோரும் புகழ்ந்தார்கள்.

ஸீதை. (ஆத்மகதமாய்) ஹா இந்துசேகரா! ஹா கௌரீதேவீ! நீங்கள்தாம் என்னைக் காக்கவேண்டும். ஐயோ! இவன் வில்லை எடுக்கும் விதத்தைப் பார்த்தால் அதிஸுலபமாய் நாணேற்றுவதுந்தவிரத் துண்டுதுண்டாய் முறித்தும் விடுவான்போல் தோன்றுகிறதே. நான் எவ்வாறு ஓர் அரக்கனுக்கு மாலையிட்டு மகிழ்ந்திருப்பேன்.

ராவ. க்ஷத்ரியர்காள்! இப்பொழுதல்லவோ உங்கள் ஆண்மையை அறிந்தேன். இதோ நீங்கள் புகழ்ந்த வில்லை ராவணன் துண்டு துண்டாய் முறித்து ஈரேழுலகிலும் அந்தச் சப்தத்தைக் கேட்டுப் பயந்து நடுங்கும் க்ஷத்ரியப்பதர்களைப் பார்த்து நகைக்கப் போகின்றான். (வில்லை உயரத் தூக்குகின்றான்.)

அசரீரி. ராவணா! ராவணா!!

ராவ. ப்ரஹஸ்தா! ஏன் அழைத்தாயென்னை?

ப்ர. மகாராஜா! நான் அழைக்கவில்லை. ஆனால் யாரோ தங்களை அழைத்த சப்தம் என்காதிலும் வீழ்ந்தது.

அசரீரி. பௌலஸ்த்ய! நான்தான் அழைத்தேன். கைலாஸபர்வதத்தைக் கரத்திலெடுத்துப் பந்தாடி, ப்ரஹ்மாதி தேவர்களையெல்லாம் காராக்ரஹத்தில் அடைத்து விளையாடி, ஈரேழுலகிலும் எதிர்நின்று போர்புரிய ஒருவனும் இல்லையெனப் பெயர்பெற்றிருக்கும் உன்னைப்போன்ற நிகரில்லாத யுத்தவீரனுக்கு இவ்வற்பவில்லை முறிப்பதனால் புகழ் சிறிதும் கிடையாது. ராவணன் பரீக்ஷைக்குட்பட்டானெனும் அவமானத்தை நீ சகித்தாலும் நாங்கள் சகியோம்.

ராவ. என்ன உரைத்தாய்! (ஆலோசிக்கின்றான்) ஆம்! நீ சொல்வது உண்மையே! என்ன காரியம் செய்யப் புகுந்தேன். தேவாதி தேவர்களையெல்லாம் அடக்கியாளும் எனக்கு இதை நாணேற்றினாலென்ன, முறித்தால்தானென்ன? இகழ்ச்சியேயன்றிப் புகழ் சிறிதுமில்லை. சீ, ராவணா! அராவணோசித காரியத்தைச் செய்யப் புகுந்தாய்! அல்பதனுஸே! நீ எனது வலது கரத்தினால் தொடுவதற்கும் யோக்யதை உடையையன்று. (வில்லை இடது கரத்தால் வீசி எறிகின்றான்.)

ஸீதை. (ஆத்மகதமாய்) அம்ப! உன் அநுக்ரஹத்தால் ராவணன் கையில் சிக்காமல் தப்பினேன்.

சதா. ஹா, லங்கேச்வரா! பரமமாஹேச்வரனே! உன் தபோதன மெல்லாம் இன்றுடன் அழிந்தது.

ஜன. தசகண்டா! என்ன கார்யம் செய்தனை? ஹரதனுவையா திரஸ்கரித்தாய்? எடு உன் வில்லை. யாரங்கே? எடுத்துவா, என் வில்லை.

ராவ. ஜனகா! கேட்கக்கூடாத வார்த்தைகளைக் கேட்டும் ஜானகியின்பொருட்டு உன்னை க்ஷமித்தேன்.

சதா. நிசாசரசக்ரவர்த்தி! வீணில் பிதற்றுதே.

ராவ. கிழக்கரடியே! நிசாசரசக்ரவர்த்தியின் ப்ரதிக்ஞையைக்கேள். எவனாயிருந்தாலும் சரி. ஸ்ரீமந்நாராயணனே வந்து இந்த வில்லை ஒடித்து இப்பெண்ணை மணந்தாலும் அவனுடன் போர் புரிவேன். கன்னிகையையும் கைக்கொள்வேன்.

(ராவணனும் ப்ரஹஸ்தனும் போகின்றார்கள், ஸீதை சதானந்தரை நமஸ்கரிக்கிறாள்.)

சதா. குழந்தாய்! அவ்வரக்கன் வில்லை ஒடித்திருப்பான் என்பதற்குச் சிறிதும் ஸந்தேகமில்லை. கடவுள் கிருபையால் பிழைத்தாய்.

ஸீதை. எல்லாம் தம்மைப்போன்ற தபோராசிகளின் ஆசீர்வாதம்!

ஜன. மைதிலீ! யாரோ வருகின்றார்கள், நீ உள்ளே செல்.

(ஸீதையும் தாதியும் போகின்றார்கள். விச்வாமித்திரர் ராம லக்ஷ்மணர் இவர்கள் வருகின்றார்கள்.)

ஜன. (நமஸ்கரித்துவிட்டு) ஸ்வாமின்! அடியேன் பூர்வ ஜன்மத்தில் செய்த புண்ணியத்தின் பலனோ அல்லது என் முன்னோர்களுடைய பாக்கியமோ தாம் இவ்விடம் எழுந்தருளி இந்த நகரவாசிகளை அநுக்ரஹித்தது. இச்சிறுவர்கள் யாரென்று அடியேன் அறியலாமோ?

விச். ஆதித்யன் இக்ஷ்வாகு முதலிய மூல புருஷர்களின் மரபில் வந்த தசரத சக்ரவர்த்தியின் புத்திரர்கள் நால்வரில் ராமலக்ஷ்மணர்கள் இவர்கள். இவர்களைப் பெற்றெடுத்த ஐயனிருக்க உபநயனாதிக்ரியைகளைச் செய்து வளர்த்தவன் வசிஷ்டன்.

இவ்விருவரில் ஸ்ரீராமன் என் வேள்விக்கிடையூறு செய்து வந்த தாடகாதிகளை ஸம்ஹரித்து, கல்லுருக்கொண்டிருந்த அகலிகைக்குப் பெண்ணுருவங்கொடுத்தான். இங்கே சிவன் சிலையை நாணேற்றி ஸீதையை மணக்க வந்திருக்கின்றான். அஃதிருக்கட்டும், மிதிலேச்வரா! ஏன் உன்முகம் வாடியிருக்கின்றது?

ஜன. ஒன்றுமில்லை. தசகண்டன் வில்லைமுறிக்க வந்து, ஹரதனுவை அவமதித்து, மங்கை வேறொருவனுக்கு மாலையிட்டபின் அவளைத் தான் பின்னர் அபஹரித்துச் செல்வதாய் இப்பொழுது தான் சபதம் செய்து சென்றான்.

விச். எல்லாம் உலகத்தின் நன்மைக்குத்தான், வாரும் செல்வோம்.

(எல்லோரும் செல்கின்றார்கள்.)

---

## இரண்டாம் காட்சி

(ராவணன் அரண்மனை மண்டபத்தில் ஓர் நாடகசாலை. ராவணனும் ப்ரஹஸ்தனும் வெளியே உட்கார்ந்துகொண்டிருக்கின்றார்கள்.)

ராவ. மைதிலீ ஸ்வயம்வரத்தில் நடந்த வ்ருத்தாந்தங்கள் யாவற்றையும் நன்றாய் எழுதி இருக்கின்றானா?

ப்ர. ஒன்றையும் விடாது வெகு அழகாய் எழுதியிருக்கின்றான்.

ராவ. யார் அந்த ஸீதையை மணந்து சென்றவன்?

ப்ர. தசரதனுடைய மூத்த மகன் ராமனாம்.

ராவ. ராமன்! பெயர் நன்றாகத்தான் இருக்கின்றது! ஒன்றும் அறியாப் பாலகனாயிருக்கவேண்டும். நான்செய்த சபதத்தை அறிந்தபின்னுமா அச்சிறுவன் இவளை மணந்தான்?

ப்ர. மகாராஜா! அதைப்பற்றி நானொன்றுமறியேன்.

(நாடக மேடையின்மீது ஒருவன் தோன்றிச் சொல்லுகின்றான்)

மகாராஜா! எல்லாம் ஸித்தமாயிருக்கின்றது. உத்திரவு கொடுத்தால் ஆரம்பிக்கின்றோம்.

ராவ. ஆரம்பியுங்கள்.

(திரை தூக்கப்படுகின்றது. ப்ரதீஹாரி, ஜனகர், விச்வாமித்ரர், சதானந்தர், ராமலக்ஷ்மணர்

இன்னும் மற்றவருடைய வேஷதாரிகள் உட்கார்ந்திருக்கின்றார்கள். ஸீதை, தாதி இவர்கள் வேஷத்துடன் சிலர் ஓர் மாலையேந்தி நிற்கின்றார்கள்.)

ராம. உலகெலா மளிக்க லாகும் உவப்புடன் பன்னாள் செய்த
அலகிலாத் தவப்பே றேனும் அகமகிழ்ந் தளிக்க லாகும்
பலகலை யுணர்ந்தோர் பொய்க்கப் பரவையும் கடக்க லாமிவ்
விலகுநல் லெழிலார் ஸீதை தன்னையின் றெய்து தற்கே.

ப்ரதீ. பாரெலாந் தத்தம் குடைநிழற் புரக்கும்
பார்த்திபர் அனைவரும் கேண்மின்
போரெலாந் தனிமெய் வெற்றியே புரியும்
மிதிலைமாச் சனகன்றன் சபதம்
தாருலா மார்பன் தானவர் கோமான்
தகாதெனக் கொன்றொழித் திட்ட
சீருலாம் செம்மைச் சிவனது சிலையைச்
சிதைத்தவர் ஸீதையைப் பெறுவார்.

முன்னொருநாள் யாகத்தின்பொருட்டு நிலத்தை உழும் போது பூமியில் தோன்றியதால் ஸீதையெனும் காரணப் பெயரைப்பூண்ட இப்பெண்ணரசியை மணக்க விரும்பும் மன்னர் இச்சபையில் எவரேனும் இருந்தால், ராவணன் மகிமையையும் மழுங்கச்செய்த இச்சிலையை வளைத்து மங்கையை மணந்து செல்லலாம்.

ராவ. மூடகவி! தசகண்டனுடைய பலமா வ்யர்த்தமாயிற்று? கைலாஸத்தைப் பெயர்த்துக் கரதலத்தில் வைத்துக்கொண்டு விளையாடின என்னையா இகழ்ந்துரைத்தாய்?

ப்ரதீ. பராக்! நரக மகாராஜர் தங்குலதெய்வத்தைப் பிரார்த்தித்து விட்டார்!

தாதி. தர்சனமாத்திரத்தில் மனத்தைக் கொள்ளை கொள்ளும் காமரூபி! காமரூபேச்வரன் இவன்!

ஸீதை. சுரர்களைக்கொல்லக் கங்கணம் கட்டியிருக்கும் அசுரன் இவன் தானோ?

ப்ரதீ. சிவபெருமானுடைய மகாத்ம்யமே மகாத்ம்யம்! நிகரில்லாத

யுத்த வீரனுயிருந்தும் ருத்ரதனுஸைப் பார்த்துப் ப்ரமித்து நின்றுவிட்டார்!

ராவ. நன்று நன்று, வாஸந்தரீயா! மானியாயிருந்தால் எடுத்த வேலையை முடிக்காமல் இவ்வாறு நிற்பாயா?

ப்ரதீ. பராக்! பராக்ரம பரிசோதனைக்குப் பாண்டிய மகாராஜர் புறப்பட்டு விட்டார்!

தாதி. கபோல காந்தியினுல் திரஸ்கரிக்கப்பட்ட மதூக புஷ்பத்தை உடைய பாண்டிமையே! பாண்டியதேசத்தரசன் இவன்!

ஸீதை. ச்ருங்கார ரஸத்தைச் சிறிது மறியாத தென்னுட்டைச் சேர்ந்தவனே இவன்?

ராவ. சிவன் வளைத்த வில்லை அவர் பக்தன் தொடலாகாதென்று அசக்தியை மறைக்க நல்ல சாக்குச் சொன்னுய்.

ப்ரதீ. பராக்! அரக்கர் மன்னனை அடித்த அர்ச்சுனன் மகனுகிய மாஹிஷ்மதீபதி வருகின்றுர், மஹேச்வர தனுஸை வளைக்க!

ராவ. ஹா! க்ஷத்ரியப்ரதீஹாரபதரே! இதுதான் உரைக்கத்தக்கது, இதுதான் உரைக்கத்தகாததென்று அறியாமல் பிதற்றுகின்றுயா இங்கு?

(அவனை வெட்டப்போகிருன். ப்ரஹஸ்தன் தடுக்கின்றுன்.)

ப்ர. மகாப்ரபு! முனிஜனங்களால் எழுதப்பட்ட நாடகம் இது. அவன்மீது கோபிப்பதில் என்ன பலன்?

தாதி. மூத்தோரிடத்தில் எப்பொழுதும் பக்தியுடைய நர்மதையே! நர்மதாநதியினுல் அலங்கரிக்கப்பட்ட நாட்டின் தலைவன் இவன்!

ஸீதை. இவன்தானே க்ஷத்ரியவம்சத்திற் பிறந்தும் தன் பிதாவைக் கொன்ற பரசுராமனிடம் போர் புரியாமல் இருப்பவன்?

ப்ரதீ. ஹாஹா! எவ்வளவு கர்வம் ஹைஹய குமாரனுக்கு! தன் புஜத்தையும் பார்த்துப் புன்னகையுடன் சிவதனுஸையும் பார்த்துத் தன் பராக்ரமத்திற்கு இது சரியான பரிசோதனை அல்ல என்பவன்போல் திரும்பிவிட்டான்.

ராவ. மூடா! அவ்வாறு செய்வதனுல் நீயும் தசகண்டனுய் விடுவாயோ?

ப்ரதீ. பராக்! சேதிபதி சன்னத்தமானுர்!

தாதி. எல்லோர்க்கும் மிதமில்லாத மதன வேதனை தசையைத் தருகின்றவளே! தசார்ண தேசாதிபதி இவர்!

ப்ரதீ. இவர் தாம் புறப்படுங்கால் அபசகுனம் தோற்றியதாகக் கூறித் திரும்பிவிட்டார்!

ராவ. தோள் வலிமை தெரிந்தது மேகலாதிபதியே! நீதான் சுத்த வீரன்!

ப்ரதீ. ஸிம்ஹளேச்வரர் சித்தமாய் விட்டார், சிவதனுஸை ஒடிக்க!

தாதி. அழிவில்லாத யௌவனதசையில் ஆரோஹணம் செய்பவளே! ரோஹணமாணிக்க பர்வதங்களின் பரமேச்வரன் இவன்!

ஸீதை. ஆபரணங்களினால் அலங்கரித்துக் கொள்வதையே ப்ரதானமாய்க் கருதியிருக்கும் ஸிம்ஹளபதியோ இவன்?

ராவ. ஸிம்ஹளபதியே! ஸந்தேகமெதற்கு? சக்தியற்றவனென்று வீற்றிருப்பதுதானே!

ப்ரதீ. பராக்! மதுராநாதன் மங்கையைக் கைக்கொள்ள மனோதைர்யம் செய்துவிட்டார்!

தாதி. நிஸர்க்க ஸர்வாங்க மாதுர்யத்தை உடையவளே! மதுராநாதன் இவன்!

ஸீதை. ப்ருந்தாவன ஸுகஜீவிதானே இவன்?

ப்ரதீ. விஷ்ணு பக்தன் சிவன் சிலையைத் தொடலாகாதென்று நல்ல சாக்குக் காட்டினார்!

ராவ. மதுராதிபதி! மகாதன்வியானாய்!

ப்ரதீ. பராக்! வருகின்றார் கார்முகாரோபணத்திற்குக் காஞ்சீபதி!

தாதி. நவகாஞ்சன ஒட்யாண ஜ்யோதியினால் அலங்கரிக்கப்பட்ட காஞ்சீ ப்ரதேசத்துடன் கூடியவளே! இவன்தான் காஞ்சீபதி!

ஸீதை. சிவன் அநுக்ரகத்தால் தானுமோர் மன்னனென்று காலம் கழிப்பவன் இவன்தானோ?

ப்ரதீ. ஸபையில் இருப்பவர்களுடன் போர்புரிந்து மங்கையை அடைய விரும்புவதுபோல் தன் கட்கத்தையும் ஸபையோர்களையும் பார்த்தவண்ணம் நிற்கின்றார்!

ராவ. ஹா, நிர்மர்யாத! செல்லுவாய் ஸ்வயம்வரத்தைக் கெடுக்காமல்,

ப்ரதீ. என்ன ஒருவரும் வரவில்லை? மன்னர்காள்! இச்சபையில் சக்திமான்கள் ஒருவருமில்லையா?

(சில மன்னர்கள் கும்பலாக வந்து வில்லைப் பார்த்துவிட்டுத் திரும்புகின்றார்கள்.)

ராவ. போர்புரியத் தெரியாத பரசுராமனென்னும் ப்ராஹ்மணன் க்ஷத்ரியகுல மனைத்தையும் சிதறவடித்தான் என்பதை இன்று தான் நம்புகின்றேன். ராவணன் அலக்ஷ்யமாய் எறிந்த இவ் வில்லை அஸாமர்த்யத்தினால் அசைக்க முடியாமல் அரசர்கள் அனைவரும் நிற்கின்றார்கள். க்ஷத்ரியக் கூட்டத்தின் பராக்ரமமே பராக்ரமம்! இதோ நான் அந்த வில்லின் கர்வத்தை அடக்குகின்றேன். (எழுந்திருக்கின்றான்.)

ப்ரஹ. மஹாப்ரபோ! நாடகமென்பதை மறந்தீரோ? நம்முன் ஜானகியு மில்லை. சிவதனுஸு மில்லை.

ப்ரதீ. பராக்! ராமபத்ரன் வருகின்றார், சங்கராகார்முகாரோபணம் செய்ய!

தூதி. ராமணீயகமே உருவெடுத்து வந்த ரமணீ! ராமபத்ரனிவர்!

ஸீதை. பௌருஷமும் ஸௌந்தர்யமும் ஒன்று சேர்த்து இவரிடத்தில் ப்ரஹ்மன் வைத்திருக்கின்றான் போலும்!

ராமன். லங்கோத்பவ! தமது சிரோங்கிய சிலையைத் தொடுவதற்கே அர்ஹனல்லாவிடினும் க்ஷத்ரியகுலத்திற்கே ஓர் இகழ் வருகின்றதே என்று இக்காரியத்தை மேற் கொள்கின்றேன். அதன் பொருட்டு என்னை மன்னிப்பீராக!

(வில்லை ஒடிக்கின்றார்; ஸீதை மாலையிடுகின்றாள். உள்திரை விடப்படுகின்றது.)

ராவ. ஹா ஹா! க்ஷத்ரியப் பதரே! நீயா என் ஸீதையை எடுத்துச் சென்றாய்?

---

## மூன்றாம் காட்சி

(மிதிலைக் கடுத்தவனம். ஸீதை ராமலக்ஷ்மணர் ஜனகர் விச்வாமித்ரர் சதானந்தர்.)

ஜன. குழந்தாய்! பெண்ணாய்ப் பிறந்தால் ஒருதினமில்லாவிட்டால் மற்றொரு தினமாவது மாதாபிதாக்களை விட்டுப் பிரியவேண்டியதுதானே. இதற்கெல்லாம் துக்கித்து முடியுமோ?

சதா. மைதிலீ!

பூமகள் அன்னை, நின்னைப் பொற்புடன் வளர்த்த தாதை
நாமவேற் சனக னென்னில், நானுனக் குரைப்ப தென்னே!
கோமள மாத ரார்க்குக் கொழுநனே சிறந்த தெய்வ
மாமவன் சாயை போல அனுசரித் தொழுகு வாயே.

ஜன. வைதேஹீ!

கொழுநனைக் கண்டா லெழுந்துநின் றவனுட்
குளிர்ப்புற வின்சொலே யுரைத்து
விழுமிய பாதார்ப் பிதவிழி யினையாய்
விதிப்படி யாசனா திகளாம்
வழுவிலா வுபசா ரங்களை நீயே
மகிழ்வுடன் செய்துபின் றாங்கித்
தொழுதெழுந் தவனை மகிழ்விப்ப தொன்றே
தொழிலெனக் கொள்கநீ தோகாய்.

விச். ஜனகாத்மஜா!

நாயகனை மகிழ்விக்குங் காரியத்திற் றளராதே,
*நாத்த னாரைத்
தூயவுடன் பிறப்பெனக்கொள், மைத்துனர்பத் தினிமாரைச்
சுளிக்கச் சொல்லேல்,
மேயவுற வினைத்தழுவி, யடிமைகளுக் கன்பாகி,
விரும்பு நாதற்
காயபகை நட்பினர்பா லவன்மனம்போல் அமைந்தினிது
வாழ்வாய் நீயே.

ஸீதை. அண்ணா! என் சகோதரிகளும் என்னுடன் வந்து விடு

---

* நாத்தனார் - என்பது இக்காலத்து நாத்தனார் என வழங்கி வருகின்றது.

கின்றார்களே ; இனி, யார் தமக்கு சிச்ருஷைசெய்ய இருக்கின்றார்கள் ?

ஜன. என்னைப்பற்றி நீ சிந்திக்கவேண்டாம். வீணாய் நீ துக்கிப்பதனால் என் மனமும் சஞ்சலத்தை அடைகின்றது. கௌசிக மாமுனியின்முன் நான் கண்ணீர்விட்டால் அதைவிட எனக்கு வேறென்ன அவமானம் வேண்டும் ?

ராம. நங்கைக்கு அழுகையும் ஓர் அழகைத் தருகின்றது.

(உள்ளே ஓர் பாட்டுக் கேட்கின்றது.)

சதா. ஜனகமகாராஜனே ! பார்க்கவமுனி வருகின்றார். ஆதிதேயங்களையெல்லாம் சன்னத்தம் செய்யும்.

(தசரதர் தர்ப்பமும் தீர்த்தமும் எடுத்து வருகின்றார்.)

ஜன. இதோ தசரதமகாராஜர் யாவற்றையும் எடுத்துக்கொண்டு தாமே உபசரிக்க வந்துவிட்டார்.

ராம. லக்ஷ்மணா ! வைகானஸ முனிகளால் சேவிக்கப்படும் வீர சிரோமணியாகிய ஜாமதக்னியரைப் பற்றி எவ்வளவோ கேள்வியுற்றிருக்கின்றோம். கடவுள் க்ருபையால் இன்று தரிசிக்கப் போகின்றோம்.

லக்ஷ். ஆர்ய ! தரிசிப்பதுந் தவிர அநுபவிக்க வேண்டுமென்கிற ஆசையும் என்னுள்ளத்தில் அதிகரிக்கின்றது.

ராம. பார்க்கவ முனியை அநுபவிக்க நாம் யார் ?

(பரசுராமர் வருகின்றார்.)

பரசு. ஹா, ச்யவனாதிகாள்! பார்க்கவன் ப்ரதிக்ஞையைக் கேளுங்கள்! இருபத்தொருமுறை ஜகத்தை க்ஷண்ணக்ஷத்திரியமாகச் செய்த ரைணுகேயன் பர்க்கனுடைய பக்னமான பாணஸனத்தைப்பற்றிக் கேள்வியுற்றதால் மற்றோர் முறை மன்னர் கூட்டத்தை மாய்க்கப்போகின்றான். ஹா ஹா ! கேட்கக்கூடாததெல்லாம் கேட்கப்படுகின்றது, பார்க்கக்கூடாததெல்லாம் பார்க்கப்படுகின்றது. இவைகளைக் கேட்டும் பார்க்கவன் பழி வாங்காமல் உயிருடன் வாழ்கின்றானல்லவா ! என்னைப் பார்த்தால் என் மாதா பார்வதிதேவி பரிஹஸிக்கமாட்டாளா? என்னுடன் வில்வித்தை கற்றவன் ஏளனம் செய்யானோ ?

க்ஷத்ரியர்காள்! சக்தியிருந்தால் தாசரதியைக் காப்பாற்றுங்கள். இருபத்தொருதரம் உங்கள் குலத்தை அழித்த பார்க்கவன் இதோ இருபத்திரண்டாந்தரம் உங்களை அழிக்க ஆயுதபாணியாய் நிற்கின்றான். ஹா! சிவன் சிலையெனச் சிரோங்கியும், த்ரிபுரதஹனாடம்பரம் செய்தும், கீர்வாண ஸாரத்தால் நிர்மாணிக்கப்பட்டுமுள்ள நீயோ துர்ஜன ஜனகனிடம் ஒப்புவிக்கப்பட்டு இக்கதியை அடைவது! ஹரசாப தண்ட தலனத்தில் எவன் கர்த்தாவோ, எவன் அனுமதித்தவனோ, எவன் பார்த்தவனோ, எவன் பரீக்ஷித்தவனோ, எவன் கேட்டவனோ, எவன் சொன்னவனோ, இவர்களனைவரையும் தண்டிக்காவிடில் நான் பரசுராமனா? ஹா! ஹா! நானிருக்க மற்றோர் ராமனல்லவோ வந்துவிட்டான்! நான் ரேணுகாஸுதன் உயிருடனிருக்க என் பெயரையுமல்லவோ அபகரித்தான் இச்சிறுவன்!

ராம. லக்ஷ்மணா! மிகவும் கோபித்தவராய் வருகின்றார் ஜாமதக்னியர்.

பரசு. ஹா ஹா! தசரதா! ஜனகா! இவ்வளவு ஸமீபத்திலா இருக்கின்றீர்கள்? எங்கே அந்த ராமன்?

ராம. முனிபுங்கவ! வீற்றிருக்கவேண்டும். தங்கள் அடிமை ராமன் காத்திருக்கின்றான், ஆதிதேயங்களுடன்.

பரசு. இந்த மாயாமரியாதைகளினால் ஏமாற்ற முடியாது, ரேணுகாஸுதனை. என் குருவின் தனுசை ஒடித்த அபராதமும், என் பெயரை அபகரித்த அபராதமும் அலக்ஷ்யம் செய்யத் தகுந்ததல்ல. பார்க்கசிஷ்யனாகிய பார்க்கவனிடம், ஸபையோர் மத்தியில் என் குருவின் வில்லை ஒடித்த இருகரங்களும், தம் சக்தியைக் காட்டி ச்லாக்யத்தை அடையட்டும்.

ராம. ஸ்வாமின்! பகுத்தறியும் புத்தியில்லாப் பாலகன் நான் ஏதோ தெரியாமற் செய்த பிழைக்காகத் தாம் இவ்வாறு கோபம் கொள்ளலாகாது. அடியேனை மன்னிப்பது தம்மைப்போன்ற பெரியோர்களின் கடமை.

பரசு. அவ்வாறு மன்னிக்கத் தக்கதல்ல உன் அபராதங்கள். எடு உன் வில்லை.

ராம. அவ்வாறு தாங்கள் மன்னிக்கமுடியாத அபராதம் யான் ஒன்

றும் புரியவில்லையே. என் புஜபராக்ரம பரிசோதனைக்காக நான் இதைப் புரியவில்லை. ஏதோ விளையாட்டுத் தனமாய்ப் புத்தியில்லாமற் செய்தேன். என்னை மன்னிப்பது தபோராசியான தங்கள் கடமை.

பரசு. என்ன உரைத்தாய்? தபோராசிதானோ? சௌர்ய ராசியன்றோ நான்? நிதர்சித லாகவ ராகவ! நன்கறிந்தேன் உன் ஆத்மவர்ணனையையும் கர்வத்தையும்!

ராம. முனிச்ரேஷ்ட! இதோ தலைவணங்கி நிற்கின்றேன்; சிரச்சேதம் செய்ய விருப்பமிருப்பின் செய்யலாம்.

தசர. உலகமுழுதும் வென்று காசிபமுனிக்குத் தக்ஷிணையாகக் கொடுத்த உதாரகுணமுடையவரே! மும்மூர்த்திகளுமே உமக்கு ஒப்பில்லையெனில் சிறுமனிதர் ஒரு பொருளோ? ராமனும் என்னுயிரும் உம் அபயம். இச்சிறுவன் செருக்கினால் தமக்குரிய வணக்கங்களில் ஏதேனும் மறந்ததுண்டோ? வலியார் காட்டவேண்டிய வலி அவர்போன்ற வலியாரிடத்திலன்றி மெலியாரிடத்திலோ? தாம்தாம் எங்களைக் காக்கவேண்டும்.

பரசு. கிழமே! விலகிநில்; இன்றேல் என் பரசிற் கிரையாவாய்.

லக்ஷ். பார்க்கவ! என்ன வீணில் பிதற்றுகின்றாய்? மூத்தவனென்று மன்னித்தேன்; வந்த வழியை நோக்கிச் செல்.

ராம. லக்ஷ்மணா! (கோபத்துடன் லக்ஷ்மணனைப் பார்க்கின்றார்.)

பரசு. ஓர் க்ஷத்ரியப்பதரா என்னிடம் இவ்வார்த்தைகளைக் கூறுவது? மற்றோர்முறை க்ஷத்ரியகுலத்தை நாசஞ் செய்ய இதோ நான் எடுத்துவிட்டேன் வில்லை. ராமா! யுத்த வீரனாயிருந்தால் எடு உன் வில்லை.

ஜன. என்ன! எல்லாம் துறந்த எனக்கே அடக்க முடியாத கோபம் வருகின்றது. யாரங்கு உள்ளே? எடுத்துவாருங்கள் என் வில்லை.

லக்ஷ். ஸ்வாமின்! நாங்கள் உயிருடன் இருக்கத் தாம் எதற்காக வில்லை எடுக்கவேண்டும்? தினகரன் குலத்தில் உதித்தவனும், மஹாபாஹுவாகிய விச்வாமித்ரமுனியின் ஏகசிஷ்யனானவனும், ஸ்ரீகண்டனுடைய சிலையைச் சிதறவடித்தவனுமாகிய

ரகுவீரனும் அவர் தம்பியாகிய நானும் உயிருடனிருக்கத் தமக்கேன் கவலை?

விச்வா. ஸீரத்வஜ! உன் மருமகன் உரைப்பது மிகவும் சரி. ஜைனேய! ராமனே என் சிஷ்யன்; நீயோ என் மருமகன். அவன் வில்வித்தையை விச்வாமித்ரனிடம் கற்றான்; நீயோ சிவனிடம் கற்றாய். அவன் சிவன் சிலையைச் சிதறவடித்தான்; நீயோ க்ரௌஞ்ச பர்வதத்தைப் பிளந்தாய். நீ க்ஷத்ரியர்களை யழித்தாய்; இவன் உலகை யழித்த தாடகையை யழித்தான். இவ்வாறிருக்க நீங்கள் போர் புரிவது யுக்தமன்று.

பரசு. மாதுர் மாதுல! உனக்கும் லங்கேசோத்பவனுக்கும் வித்யாஸமில்லையோ? உன் சிஷ்யனாகிய அந்த க்ஷத்ரியப்பதருக்கும், சங்கர சிஷ்யனாகிய எனக்கும் வித்யாஸமில்லையோ? ராமா! எடு உன் வில்லை, வித்யாஸ மேற்படட்டும்.

சதா. என்ன ஆச்சர்யம்! பார்க்கவ முனியே இவ்வளவு அகங்காரத்துடன் பேசுகின்றாரே!

பரசு. தன் முயற்சியால் ஸம்பாதித்த ப்ராஹ்மண்யத்தை உடையவனுக்குக் குருபதவியும் உண்டோ?

ராம. ஜாமதக்னி! மூத்தோரை அவமதிக்க எந்த சாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கின்றது? வில்லேந்தி மேற்கொண்ட க்ஷத்ரிய தர்மத்திலா அல்லது முனிகளுக்கேற்பட்ட வேதத்திலா?

லக்ஷ். பெற்றெடுத்த அன்னையைக் கொலை புரிந்தவனுக்கு இதைவிடத் தர்மம் தெரியுமோ?

பரசு. ஹா, க்ஷத்ரிய கேடவட!

ராம. கர்ண கடோர வார்த்தைகளினால் என்ன பலன்? விச்வாமித்ர முனிச்ரேஷ்டரையா அவமதித்தாய்? எடு வில்லை.

பரசு. ஸாது ஸாது! க்ஷத்ரிய டிம்ப! மாதுர் மாதுலசிஷ்ய! ஸாது ஸாது! தாடிததாடகா குடும்பக! ஸாது ஸாது! பக்னபர்க்க பாஸன! ஸாது ஸாது! ஜைனேய ரண ரஸிக! ஸாது ஸாது!

லக்ஷ். ஆர்ய! என் அன்னை ஜானகிதேவியின் பொருட்டுச் சங்கர கார்முகாரோபணத்திற்குத் தம்மை முன் அனுப்பினேன். புஜ

பராக்ரம பரிசோதனையில் நான் உயிருடன் இருக்க நீர் போர் புரிவது சரியன்று.

ஸீதை. குழந்தாய், லக்ஷ்மணா! ரகுகுலோசித ஸுலக்ஷணனைப்.

ராம. என்னை உத்தேசித்து வந்திருக்க நீ போர்புரிவது சரியன்று.

பரசு. ராமா! தனக்கு ஸமமான யுத்தவீரனோடுதான் போர் புரிய வேண்டுமென்றும், தாழ்ந்தவனோடு போர்புரியலாகாதென்றும் யுத்ததர்மம் இருக்கின்றது. இதோ என் கையில் இருக்கும் வில்லை எடுத்து நாணேற்றினால் நீ என்னுடன் போர் செய்யத் தக்க வீரன்தான்.

(ராமன் அதை வாங்கி வளைக்க ஆரம்பிக்கின்றார்.)

பரசு. ஹா, ராகவா! என்னை மன்னிப்பாய். இப்பொழுதுதான் நீ யார் என்பதை நான் அறிந்துகொண்டேன்.

ராம. ஜாமதக்னியரே! மன்னிப்பதற்கு என்ன இருக்கின்றது? எல்லாம் பரமாத்மாவின் செயல். நம்மால் ஆவது என்ன?

பரசு. என் ஜன்மம் இன்று பலிதமாயிற்று. என் காரியம் முடிந்தது. நீர்தாம் இனி இவ்வுலகில் துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனம் செய்யவேண்டும்.

ராம. க்ஷத்ரிய குலத்தில் உதித்தவனுடைய கடமைபன்றோ அது?

பரசு. எனக்கு இந்த ஒரு வரம் அளிக்கவேண்டும். ஹரதனுவை அவமதித்த அரக்கர் அரசனை என்பொருட்டுத் தாம் தண்டிக்கவேண்டும்.

ராம. எல்லாம் அறிந்த தமக்கு நான் சொல்லவேண்டியது ஒன்றுமில்லை. எல்லாம் நம்மைப் படைத்த பரப்ரஹ்மத்தின் செயல். அவன் எவ்வாறு நிச்சயித்து இருக்கின்றானோ அவ்வாறு நடந்தே தீரும்.

(போகின்றார்கள்.)

---

# இரண்டாம் அங்கம்

## முதற் காட்சி

(அயோத்தியில் ஒரு தெரு. ஆறு வேலைக்காரர்கள் பாட்டுப் பாடிக்கொண்டு வேலைசெய்துகொண்டிருக்கின்றார்கள். அவர்கள் போனதும் நான்கு ஜனங்கள் வருகின்றார்கள்.)

1-ஜ. அடே! இன்னமே நம் பாடு இதுதாண்டா!

2-ஜ. ஒன்று பார்த்தாயாடா நீ?

1, 3-ஜ. என்னடாது?

2-ஜ. ராமனுக்குப் பட்டாபிஷேகமென்று தமுக்கு அடிச்சுக்கொண்டு போனுனே, அப்போது ஒரு கெட்ட சகுனம் உண்டாச்சு தடா.

4-ஜ. அடே! உன் சகுனமு மாச்சு இதுவு மாச்சு. நிரம்பத் தெரிஞ் சாற்போலே பேசுகிறையே. அதுதான் எனக்குப் பிடிக்க வில்லை. ராமனுக்குப் பட்டாபிஷேகமானால் கெட்டதென்ற பேச்சே ஊரிலே இருக்காதே.

1-ஜ. அடே! ஒன்று சொல்லுகிறேன் கேளுங்கள். ராமனுக்குப் பட்டாபிஷேகம் ஆனதே, நாமெல்லாம் கும்பலாய்ப் போய்ப் பாதத்திலே விழுந்து கும்பிட்டு ஒண்ணு கேட்கவேண்டும்

3-ஜ. என்னடா கேட்கவேண்டும்? சொல்லித்தொலை, பார்க்கலாம்.

4-ஜ. அவன் சொல்லுகிறது எனக்குத் தெரியும்.

1-ஜ. என்ன? சொல்லடா பார்க்கலாம்.

4-ஜ. அன்றைக்குக் களத்துமேட்டிலே சுமையடிச்சபோது பேசிக் கொண்டிருந்தோமே, அதுதானே?

1-ஜ. அதுவாடா? அதல்லவே யல்ல. எல்லாருமாய்ப் போய் இன்னமே இந்த ஊரிலே நொண்டி முடம் கூன் குருடு யாரும் இருக்கக் கூடாதென்று செய்யச் சொல்லவேண்டும்.

4-ஜ. ஐயோ, பாவம்! அவர்கள் உன்னை என்னடா செய்தார்கள்? அவர்கள் தங்கள் பாட்டுக்கு இருக்கிறார்கள்.

1-ஜ. உனக்கென்னடா தெரியும்? கண்ணாலம் கார்த்திகையென்று ஒரு நல்ல காரியத்தைச் செய்கிறபோது கூனும் குருடும் எதிரே

வந்து நிற்கிறது. அதனுலேதான் ஊரைவிட்டு அவைகளை யோட்டி யடிக்கவேண்டுமென்று சொல்லுகிறேன். அடே! அதோ வருகிருள் பாரடா, கூனியக்காள்.

(மந்தரை வருகின்ருள்.)

மந். யாரையடா கூனியென்று அழைக்கின்ருய்?

3-ஜ. அவளையாடா கூனியென்று கூப்பிட்டாய்? சீச்சீ! எங்கள் அக்காள் எத்தனை அழகாய் இருக்கிருள். அவன் கிடக்கிருன், நீ கூனியக்காள் அல்ல. அவன்தான் கூனன். அடே! நீங்கள் யாரும் இவளைக் கூனியென்று கூப்பிடக்கூடாது, தெரியுமா? கூனியில்லை.

மந். உங்களுக்கெல்லாம் என்ன வாழ்வு வந்துவிட்டது திடீரென்று?

4-ஜ. அக்கா! நான் வந்திருக்கிறேன். நான்தான் கூனன். அழகாய் இருக்கின்றீர்களே, உங்களுடன் கொஞ்சம் வேடிக்கையாய்ப் பேசலாமென்று வந்தேன்.

2-ஜ. அடே! முன் எப்போதோ சாமி தேவதைகளுக்கும் அஸுரப் பயல்களுக்கும் அமுதம் பங்கிட்டபோது பெண்பிள்ளையாக வந்தாராம். அப்போது இந்த அம்மாள் முதுகு வெகு அழகாக இருக்கிறதென்று இதேமாதிரி முதுகு வைச்சுக் கொண்டு வந்தாராம்.

3-ஜ. சீச்சீ! மூஞ்சியைப் பாரடா! அழகு சொட்டுகிறது! அக்கா! உன்னை எப்போதாவது யாராகிலும் கண்ணுலம் பண்ணிக்க ஆசைப்பட்டாரு?

மந். ஆகட்டும், ஆகட்டும். உங்கள் கொழுப்பை யடக்க வழி எனக்குத் தெரியும். என் பரதன் பட்டத்துக்கு வந்தபிறகு உங்களை என்ன செய்கின்றேன் பாருங்கள்.

3-ஜ. அடேயப்பா! அக்கா, நீயென்ன சொன்னுய்?

1-ஜ. இப்போது சொன்னுயே, ஆயிரத்திலே ஒரு பேச்சு. இப்போது தான் ராமனுக்குப் பட்டாபிஷேகமென்று ———

மந். என்ன, என்ன! ராமனுக்கா பட்டாபிஷேகம்?

2-ஜ. அடேடே! இப்போது பாரடா மூஞ்சியை. அஞ்சுபலம் இஞ்சியைத் தின்ற குரங்கைப்போல் இருக்கிறது.

(ஓர் பஜனை வருகின்றது. அதனுடன் மந்தரை தவிர எல்லோரும் போகின்றார்கள்.)

மந். ராமனுக்குப் பட்டாபிஷேகமா? நான் உயிருடனிருக்க ராமன் முடிதரித்து அரசாள்வதா? இளவயதில் மண்ணுண்டையால் அடித்துப் பரிகாஸம் செய்ததை இதற்குள் மறப்பேனா? ராமனுக்குப் புத்தி புகட்ட இதுதான் தக்கசமயம்; நான் ஜன்மமெடுத்தது இக்காரியம் கைகூடினதும் ஸபலமாகும். இப் பட்டாபிஷேகத்தை நிறுத்துவதுதான் முதல் காரியம்......... ஆம்! அதுதான் சரி. என் வாக்கைத் தடுத்துச் சொல்லக் கைகேயி சக்தியற்றவள். காடாளக் குழந்தையைப் பெற்றாள் கோசலை; நாடாள நன்மகனைப் பெற்றாள் என் கைகேயி!

(மந்தரை போகின்றாள். இரண்டு ப்ராஹ்மணர்கள் வருகின்றார்கள்.)

1-பி. ஓய்! தேவரீர் வாயை மூடிக்கொண்டு ஒருநாழிகை இருக்கமாட்டீரா? அதிலேயும் அந்தப் பாழாய்ப்போன ஜோஸ்யம் உம்முடைய வாயில் அகப்பட்டுக்கொண்டு விழிப்பதுபோல்-அடாடா! வாயைத் திறந்து சொல்லவேண்டியதுதான். உடனே கெட்டதெல்லாம் பலிக்கின்றது.

2-பி. அது என் தப்பா? தேவரீர் என்னசொன்னாலும் சரி. வசிஷ்டர் இல்லை, ப்ருஹஸ்பதியேதான் நாள் வைத்தாலென்ன? இந்த முஹூர்த்தம் தப்பத்தான் போகின்றது.

1-பி. இதை வசிஷ்டர் இடமாவது சொல்லித் தொலையுமே.

2-பி. நமக்கேன் அந்த அதிகப்ரஸங்கித்தனம்? இந்த லக்னத்தில் ஓர் ஆபத்து ஸம்பவிக்கப் போகின்றது. ஆனால், இந்தமாதிரி ஆபத்தென்று சொல்லமுடியவில்லை. அதில் ஒன்று பாரும். அந்த ச்லோகத்தை இன்னொருவிதமாய்த் திருப்பிப் பார்த்தால் ஒரு ஸம்பத்து வரும் என்றுகூடச் சொல்லலாம்.

1-பி. உம்முடைய வாயால் அதைச் சொல்லி அழுகிறதுதானே?

2-பி. இதற்குள் எது சரியென்றும் ஒரு ஆரூடம்பார்த்தேன், ஆபத்துரூபமான ஸம்பத்தென்று வந்தது.

(பஜனை திரும்புகின்றது, எல்லோரும் போகின்றார்கள்.

## இரண்டாம் காட்சி

(கைகேயி ராம லக்ஷ்மணர் மூவரும் ஓர் ஊஞ்சலின்மீது உட்கார்ந்துகொண்டிருக்கின்றார்கள்.)

கைகே. ராமசந்திரா! முடிபுனை கடிகைநாள் நாளையே என்று கேள்வியுற மிகவும் சந்தோஷம். யாவற்றையும் நன்கறிந்த உனக்கு நான் உரைக்க என்ன இருக்கின்றது? குலதர்மத்தைக் கைவிடாது காக்கவேண்டும். கண்மணிகாள்! போய்க் கௌஸல்யையைப் பார்த்து வாருங்கள். பெற்றெடுத்த அன்னைக்கன்றோ இச் சுபசமாசாரத்தை முதலில் சொல்லவேண்டும். சீக்கிரம் போய் வாருங்கள்.

ராம. இதோ போகின்றோம்.

(இருவரும் நமஸ்கரித்துவிட்டுப் போகின்றார்கள். மந்தரை வருகின்றாள்.)

மந். ஹா! அதை நான் சிறிதும் எதிர் பார்க்கவில்லை!

கைகே. என்னடி சொன்னாய், மந்தரா?

மந். ஒன்றுமில்லை! அப்படிச் சொல்ல.....இப்பொழுது என்ன அதற்கு?......சரி. அஃதிருக்கட்டும். இப்பொழுது இங்கிருந்து சென்றது யார்?

கைகே. என் அருமைக் குழந்தை ராமலக்ஷ்மணர்கள்.

மந். என் அருமைக் குழந்தை ராமலக்ஷ்மணர்கள்!......முன் சம்பராசுர யுத்தத்தில் அரசன் உனக்கு இரண்டு வரமளித்ததை அவர்கள் அறிவார்களோ?

கைகே. ஆதியோடந்தமாய் அறிவார்கள். எதற்காகக் கேட்கின்றாய்?

மந். ஒன்றுமில்லை. சந்தேகம் தெளியவே. வேறு தீங்கொன்றுமில்லை.

கைகே. மந்தரா! என்ன சந்தேகம் சொல்லமாட்டாயா? வேறு தீங்கு ஒன்றுமில்லை என்றால் ஏதோ ஒன்று இருக்கின்றதாகக் காண்கின்றதே. என்னடி அது?

மந். வீண் மனஸ்தாபம் எதற்கு? கைகேயி! நாளைத்தினம் ராமனுக்கு மகுடாபிஷேகமாமே. தெரியுமோ உனக்கு?

கைகே. வேறுவார்த்தையில் அதை மறந்தே விட்டேன், பார்த்தாயா?

அச்சந்தோஷ சமாசாரத்தை நினைவு மூட்டினதற்காக இதோ இந்த ஹாரத்தைப் பெற்றுக்கொள். (கொடுக்கின்றாள்)

மந். (அதைத் தள்ளிவிட்டு) சந்தோஷ சமாசாரத்தை நினைவு மூட்டினதற்காக இந்த ஹாரத்தைப் பெற்றுக்கொள்! அடி, பேதாய்! விஷப்பாம்பு தன்னை நெருங்கி விழுங்குகிறவரையிலும் ஒளி மழுங்காமல் விளங்கும் பூர்ணசந்திரன் போல் பேரிடர் உன்னைப் பிணிக்க வரவும் நீ வருந்தாமல் இவ்வாறு இருப்பதோ? யாரோ கதவை இடிக்கின்றார்கள். இதோ வருகின்றேன்.

(வெளியே போகின்றாள்.)

கைகே. தெய்வம் சாக்ஷியாய் வெளியிற் கூறத்தகாத குரூபமான செய்தியை மறைக்க முயல்பவள்போல் நான் கூறும் ஒவ்வொரு பதத்தையும் எதிர்த்தொலித்துப் புருவத்தை நெரித்து முகத்தைச் சுளித்துக் கொள்கின்றாள். ஹாரத்தையும் தள்ளி விட்டாள். (மந்தரை வருகின்றாள்) மந்தரா! என்னிடம் நீ விச்வாசம் உள்ளவளாயின் உடனே உன் உள்ளத்தை வெளியிடு.

மந். உன்னிடம் எனக்கு விசுவாசம் உண்டென்று உனக்கே நன்றாய்த் தெரியும். ஆனால், நான் உரைப்பது தப்பாயிருப்பின் என்மீது உனக்கிருக்கும் விச்வாசம் மாறிவிடுமே என்றுதான் ஆலோசிக்கின்றேன்.

கைகே. உன்னிடம் எனக்கு மெய்யன்பில்லையெனின் என் உயிர் நரகில் வீழ்ந்து இடர்ப்படட்டும். உன்மீதுள்ள ஆசை ஒழியுமாயின் எனக்கு நாசகாலம் வந்துவிடும். நீ விச்வாசமும் யோக்யதையும் உள்ளவளென்றும், வாயைத்திறந்து ஒன்றைக் கூறுமுன் வார்த்தையை நிறுத்துப் பார்ப்பவளென்றும் அறிந்திருப்பதனால்தான் இவ்வாறு நீ மயங்கி மயங்கிக் கூறுவதைக் கேட்டு அஞ்சுகின்றேன்.

மந். கைகேயி! உன்னை நான் மிகவும் வேண்டிக் கொள்கின்றேன். நான் கொண்ட சந்தேகம் ஒருவேளை கொடியதாக இருந்தபோதிலும் - ஏனெனில், பிறருடைய குற்றங்களைக் கண்டு களைவதே என்னுடன் பிறந்த குணமாகும். அன்றியும் என் சந்தேகம், இல்லாதவைகளை இருப்பவைகளாக ரூபிக்கும்—விவேக

முள்ள நீ உனக்கு உண்டாயிருக்கும் ஆபத்தை எப்பொழுது அறியவில்லையோ அப்பொழுது நான் எதற்காக உனக்கு மனவருத்தத்தைத் தரவேண்டும்?

கைகே. எனக்காவது ஆபத்தும் மனவருத்தமும் வருவதாவது! த்ரிலோகத்தையும் எதிர்த்து வில்லை யெடுத்து ஜயபேரியுடன் திரும்பக்கூடிய ராமாதிமக்களைப்பெற்ற எனக்கும் இடரென்பது உண்டோ?

மந். உன்னலம் வீழ்ந்தது. செல்வமும் ஒழிந்தது. கோசலை தன் சூழ்ச்சியினால் வாழ்கின்றாள். பேதாய்! உன் பர்த்தா முன்போல் இப்போதும் உன்னிடம் அன்பு பாராட்டுகின்றாரென்று கருதுகின்றாயோ?

கைகே. அதற்கென்ன ஐயம்? நான் கறுத்துவிட்டேனா? அல்லது வயது முதிர்ந்து தளர்வடைந்து விட்டேனா? ஒன்றையும் காணேனே!

மந். சுத்த தரித்ரனாயினும் போதுமென்ற மனமிருந்தால் அவனை குபேரனையும் வெட்கச் செய்யும் தனவானாவான். அளவில்லாத ஐச்வர்யம் இருந்தாலும் ஏழையாகக் கூடுமோ என்று அஞ்சுபவனை பரமதரித்திரன். ஆகையால், நீ இப்பொழுது இருப்பது போலவே எந்நாளும் இருப்பாயாக! நான் போய்வருகின்றேன்.

கைகே. மந்தரா! உனக்கு என்மீதிருக்கும் அன்பு இதுதானோ? என்னைச் சந்தேகபிசாசத்திற்கு அதீனமாக்கிக் கஷ்டப்படுத்துகின்றாயே?

மந். ஆடவர் நகைசெய்ய ஆண்மை கெடத் தாடகையென்ற தையலைக்கொன்ற கொடுஞ்சிலை ராமனுக்கு நாளை மகுடாபிஷேகமென்றால் அதைவிட வேறு ஆபத்தும் வேண்டுமோ? அதில் தெரியவில்லையா உன்மீது உன் கணவனுக்கிருக்கும் அன்பு?

கைகே. நீ எவ்வளவு சாமர்த்யக்காரி என்பதை இப்பொழுதுதான் அறிந்தேன். என் உள்ளத்தைப் பரீக்ஷிக்கவன்றோ இவ்வளவு காலம் இப்படிப் பேசிவந்தாய். இப்பொழுதாவது மனப்பூர்த்தியுடன் கொடுக்கும் இந்த ஹாரத்தைப் பெற்றுக்கொள்.

மந். (மறுபடியும் தள்ளிவிட்டு) அடிபேதாய்! உனக்குப் பிறந்த பரதனுக்கே சத்ருவாய் வந்து சேர்ந்தனையே? நீ துன்பத்தை அடையவா நானிருப்பது? ராமன் சிங்காதனத்தின்மேலேறினால் பரதன் அவ்விடத்திலிருந்தும் தள்ளப்பட்டவனன்றோ?

கைகே. மந்தரை! போதும், நிறுத்து உன் வார்த்தையை.

மந். ராமன் சிறந்த செல்வத்தை அடைந்தான். பரதனோ பிறந்தும், தௌர்ப்பாக்யன் உன் வயற்றில்வந்து பிறந்தானே! உன் சக்களத்தியின் மகன் முடிதரிக்க நீ கண்ணாரப் பார்ப்பதோ?

கைகே. இன்னொருமுறை இவ்வார்த்தைகளை என்னிடம் உரைப்பாயாயின் அந்தக்ஷணமுதல் நீ வேறு நான் வேறுதான். இவ்வார்த்தைகளைச் சொன்ன நாவைச் சேதித்திருக்கவேண்டும். நானுக வற்புறுத்தி உரைக்கச் சொன்னதாலும், பிறப்புமுதல் உன்னையும் உன் யோக்யதையையும் அறிந்திருப்பதனாலும் இந்த ஒருமுறை மன்னித்துவிட்டேன்.

மந். ஐயோ, காருண்யமே! ஐயோ தெய்வமே! நீங்கள்தாம் என்னைக் காக்கவேண்டும். மந்தரை இன்றுமுதல் கைகேசியின் வேலையை விட்டு உங்கள் கீழ் அமர்ந்திட்டாள். மந்தரா! கடவுள்தான் உன்னைக் காக்கவேண்டும். நற்குணத்தைத் துர்க்குணமாக்கி வாழும் மூடமாகிவிட்டேன். என்னகாலம்! அறிவீர் மாநிலத்தீர்! நல்லொழுக்கமும் யோக்யதையும் க்ஷேமத்திற்கு வழியல்ல. இதை எனக்கு அறிவித்ததற்காக வந்தனம், அம்மணீ! இனி நான் எனது நண்பர் எவரிடமும் அன்பு பாராட்டேன், அன்பே துன்பம் விளைவிப்பதால். அனுமதி கொடும் அம்மணீ! கானகம் சென்று கடுந்தவம் புரிவேன்.

கைகே. போகாதே இரு. இந்த ஒருவிஷயத்தில் புத்திமாறிப் பேசினபோதிலும் நீ யோக்யதையுள்ளவளே.

மந். அறிவுள்ளவளாக இருந்திருக்க வேண்டுமென்று கூறு. யோக்யமாயிருப்பது அறிவின்மை. அதனால் ஒருத்தி, தான் எதற்காகப் பாடுபடுகின்றாளோ அதையே இழக்கின்றாள்.

கைகே. அவ்வாறு நீ எதை இழந்தாய்?

மந். உனக்கு வரும் தீங்கைக் காட்டவந்து உன்னையே இழந்தேனே!

கைகே. வேண்டாமென்று பன்முறை கூறியும் அவ்வார்த்தையை விடமாட்டேனென்கிறாயே. ராமனும் பரதனும் எனக்கு ஒன்றே.

மந். என்மீது கோபியாது காரணத்தைக் கேட்டுப் பிறகு அவ்வார்த்தையைச் சொல்.

கைகே. வெயின்மு றைக்குலக் கதிரவன் முதலிய மேலோர்
உயிர்மு தற்பொரு டிறம்பினு முறைதிறம் பாதோர்
மயின்மு றைக்குலத் துரிமையை மனுமுதல் மரபைச்
செயிரு லப்புறச் சித்தையா லென்சொனாய் தீயோய்!

மந். மூத்தவன் முடிதரிப்பதற்கு அரசர்கள் தாங்களாக ஏற்படுத்தின விதியேயன்றிச் சாஸ்த்ரவிதி யில்லை. இருப்பதாகவே வைத்துக்கொள். அம்முறைப்படி பார்த்தால், சக்கரவர்த்தி உயிருடன் இருக்கும்போது இளையவனான ராமனுக்கு ராஜ்யம் வருவது எப்படி? சக்கரவர்த்திக்குப் பின் ராமனுக்குத்தானே ராஜ்யம் என்பாயேல், ராமனுக்குப் பின் பட்டத்துக்கு வர வேண்டியவனான பரதன், ராமனிருக்கும்போதே பட்டத்துக்கு வருவதிலும் குற்றமில்லையே. பரதன் இங்கிருந்தால், நீ அவனைப் பார்த்து, அரசை அவனுக்கு எங்கே கேட்டுவிடுகின்றாயோ என்ற வஞ்சக எண்ணம் கொண்டன்றோ உன் கணவன் அவனை மாதாமஹனிடம் அனுப்பிவிட்டார்.

கைகே. நீ கூறுவது உண்மையாக இருந்தாலும் இருக்கலாம்! ஆனால் என்மீதும் பரதன் மீதும் எவ்வளவு அன்பு பாராட்டி வருகின்றான் ராமன். அவன் முடி தரித்தால் என்ன? பரதன் முடிதரித்தால் என்ன? சிலகாலம் தான் அரசுபுரிந்து பின்னர் என் மகனுக்குத் தானாகவே பட்டத்தை யளிப்பான். பேதாய்! ராமன் குணத்தை நீ அறியமாட்டாய். பட்டாபிஷேகம் நிச்சயமானவுடன் தன் அன்னையிடமும் செல்லாது நேராக இங்கேவந்து எனக்கு அச்சுபசமாசாரத்தைச் சொல்லி என்னை நமஸ்கரித்துவிட்டு இப்போதுதான் சென்றான்.

மந். கைகேயி! உன்னை இதுவரையில் புத்திசாலியென்று எண்ணியிருந்தேன். வெளி வேஷத்தால் நன்றாய் ஏமாற்றப்பட்டாய். ராமனுடைய எண்ணத்தை நீதான் அறியமாட்டாய். அறமும்

அருளுமுடைய தபஸ்விகளுக்குக்கூடப் பெருஞ்செல்வம் வந்த வுடன் சித்தம் மாறுபட்டுப் போய்விடுகின்றது. சாதாரண மனுஷ்யர்களைப்பற்றிக் கேட்பானேன்? இப்பொழுது உங்கள் மீது ராமன் அன்புவைத்திருப்பது உண்மையாயிருந்தாலும், பட்டம் தனக்குக் கிடைத்தபிறகும் இவ்வாறே இருப்பா னென்று நம்புகின்றாயா? சில வருடத்திற்குப் பின் உன் மகன் பட்டத்திற்கு வருவானென்றாயே. அதற்குள் ராமனுக்குக் குழந்தை பிறந்தால் ராஜ்யத்தை அவனுக்கன்றோ அளிப்பான். இவையெல்லாம் இருக்க, ராமன் இங்கு வந்ததைப்பற்றித் துதித்தனையே. எங்கு நீ பட்டத்தைப் பரதனுக்குக் கேட்டு விடுகின்றாயோ என்று உன்னை ஏமாற்றவே இங்கு முதலில் வந்தான். தான் கொண்ட வஞ்சக எண்ணத்தை நிறைவேற் றிக் கொண்டான்.

கைகே. அடீ, மந்தரா! நீ சொல்வது ந்யாயமாக இருந்தாலும் நான் எவ்வாறு மனம் துணிந்து என் கணவனை நோக்கி இம்மகுடா பிஷேகத்தை நிறுத்தச் சொல்வேன்?

மந். இதற்கெல்லாம் பார்த்தால், அபயமென்று வந்தடைந்தவருக்கு அன்னமிடவும், பிச்சையென்று இரந்தவருக்குப் பிச்சை போட வும் என்ன செய்வாய்? கௌஸலையைத்தானே கேட்டு வாங்க வேண்டும்?

கைகே. என் நகைகள் என்னுடைமை யல்லவா? அடுத்தவர்களுக்கு அவற்றைக் கொடுப்பேன். இவ்வளவு ஏற்பாடுகளும் முடிந்த பின் இம்மகுடாபிஷேகத்தை நான் நிறுத்தினால், என்று மழி யாத பெரும்பழிக்கல்லவோ நான் ஆளாகவேண்டும்!

மந். பெரும்பழி! அது என்ன அது? உலகில் எல்லோர்க்கும் பொல்லாரவது, எல்லோர்க்கும் நல்லாரவது உண்டோ? ஒரு வர்க்குக் கெடுதி செய்தால், அது இன்னும் எவராவது ஒரு வர்க்கு நலமாகத்தான் முடியும். இப்பொழுது நீ ராமனுக் குக் கெடுதி செய்தால் அது பரதனுக்கு நலமன்றோ? ஆனால் இவைகளெல்லாம் எனக்கென்ன? நீ கைகட்டிச்சுகமாய்க் காலம் கழி. உன் மகனும் பிதாவும் நகர்விட்டுக் கானகமேகட்டும்!

கைகே. என்னடீ! ஒன்றிற்கொன்று கோவை யில்லாமல் வார்த்தை யாடுகின்றாய்? அவர்களேன் கானக மேகவேண்டும்?

மந். உன் பிதாவின் சத்ருக்களில் முக்யனாயும் பலவானாயுமுள்ள ஜனகன் தசரதருக்குப் பயந்தல்லவோ உன் பிதாவுடன் யுத்தம் செய்யாமல் இருக்கின்றான். ராமன் முடிதரித்து விட்டால் அவன் ஜனகனுடன்தான் சேர்வான். உன் பிதாவால் அவர்களை எதிர்க்கமுடியாது. ஆகையால், உன்னைப் பெற்றதற்காக உன் பிதா கானகமேகிக் கடுந்தவம் புரியவேண்டியதுதான்.

கைகே. ஆம், ஆம்! அதை நான் சிறிதும் யோசிக்கவேயில்லை. ஆனால், நான் கேட்டால் என் பர்த்தா அவ்வாறே பரதனுக்கு மகுடமளிப்பார் என்பது என்ன நிச்சயம்? முடியாதென்றால் என் வாழ்வெல்லாம் அடியோடு கெட்டுவிடுமே?

மந். இதையுமா நான் சொல்லவேண்டும்? முன் சம்பராசுர யுத்தத்தில் உனக்குக் கொடுத்த இரண்டு வரங்களில் ஒன்றால் பரதனுக்குப் பட்டமும், மற்றொன்றால் பதினான்கு வருடம் ராமனுக்கு வனவாசமும் கேள். அதை மறுக்க முடியாது, மன்னனாலும்.

கைகே. மந்தரா! நீ எனக்கும் என் குடும்பத்திற்கும் இவ்வளவு உபகாரம் செய்ததற்காக நான் உனக்கென்ன ப்ரத்யுபகாரம் செய்யப்போகிறேன்?

மந். உன்னையும் உன் பிள்ளையையும் கண்குளிர நல்ல ஸ்திதியில் பார்த்தால் அதுவே எனக்குப் போதும். காலதாமதம் செய்யலாகாது. அரசன் இங்கு வரும்சமயமும் இதுவே யாகையால் வந்த உடன் காரியத்தை முடித்துக்கொள்.

கைகே. காரியம் முடிந்ததாக எண்ணிக்கொள். கைகேயி கருதிய காரியமும் கைகூடாதிருக்குமோ? இதோ என் கோபாக்ருஹத்தில் அவர் வரவை எதிர்பார்க்கின்றேன்.

மந். இவ்வளவுதானா உன் புத்தி? நீ கோபத்துடன் படுத்திருந்தால் அவர் உன்னை இங்கே காணாமல், 'நாளைய தினம் கோபசாந்தி செய்யலாம், இப்போழுது அங்கே சென்றால் காலதாமதமானால் என்செய்வது' என்று திரும்பிவிட்டால் உன் காரியம் என்ன வாகும்? நான் கூறுவதைக் கேள். அவர் வந்ததும் அதிக ஆவ

னுடன் நல்லவாவு கூறி, அவர் காமத்தீயை ஜ்வலிக்கச்செய்து இவ்வரங்களைக் கேள்.

கைகே. அதுதான் நல்ல யோசனை. அதோ வருகின்றார், நீ இவ்வழியாய்ச் செல்.

(மந்தரை போகின்றாள். தசரதர் வருகின்றார்.)

நாதா! இவ்வளவு காலமா தமக்கு இங்குவர ? இதோ இந்த மஞ்சத்தில் உட்காரலாமே.

(மஞ்சத்தின் மீது உட்கார்ந்துகொண்டு பேசுகின்றாள்.)

தச. கண்ணே! இவ்வாறு உன்னுடன் இருந்து சுகிக்க நான் போன ஜன்மத்தில் என்ன புண்ணியம் செய்தேனோ ?

கைகே. நாதா! நாமிருவரும் இவ்வாறு காலங்கழிக்குந் தருணத்தில்—, ஆனால் எனக்கு நெடுநாளாய்த் தங்களை ஒன்று கேட்க வேண்டுமென்கிற எண்ணம் இருக்கின்றது.

தச. என்ன அது ? என்னிடத்தில் உரைக்க உனக்கென்ன ஸங்கோசம் ?

கைகே. ஸங்கோசம் ஒன்றுமில்லை. ஆனால், நீர் கோபித்துக்கொண்டால் என்கதி என்னவாகும் என்று தான்......

தச. கண்ணே! எனக்கா உன்மீது கோபம்வரும் ? உன்மீது கோபித்தால் என் உயிர் அப்போதே என் உடலைவிட்டுப் பிரிந்துவிடுமே. முன் சம்பராசுர யுத்தத்தில் என் உயிரைக் காத்தவள் நீயல்லவா ?

கைகே. நாதா! அதைக் கூறவே ஞாபகம் வந்தது. அப்பொழுது எனக்கு இரண்டுவரம் கொடுத்தீர்களே. அவற்றை எப்பொழுது கேட்டாலும் கொடுப்பதாக வாக்களிக்கவில்லையா தாங்கள் ?

தச. ஆம். அதற்கென்ன ? எப்பொழுது கேட்டாலும், எதைக்கேட்டாலும் தருகிறேன்.

கைகே. நாதா இவ்வார்த்தையைத் தட்டமாட்டீர்களே தாங்கள் ?

தச. இதென்ன ? திடீரென்று என்மீது ஸந்தேகம் கொண்டாய் ? என் அருமைக்குழந்தை ராமன்மீது ஆணை, எதைக்கேட்டாலும் கொடுப்பேன்.

கைகே. அப்படியாயின் அவ்வரங்களில் ஒன்றால் என் பரதனுக்குப்

பட்டமளித்து மற்றொன்றால் ராமனைப் பதினான்குவருடம் கானகத்திற்கு அனுப்பவேண்டும்.

தச. ஹா! என்ன உரைத்தாய்!

(மயக்கமாய்க் கீழே விழுகின்றார். சுமந்திரர் வருகின்றார்.)

கைகே. சுமந்திரரே! என்ன விசேஷம்?

சுமந். ஒன்றுமில்லை; சக்கரவர்த்தியை வசிஷ்ட முனிவர் அழைத்து வரச்சொன்னார்.

கைகே. மகாராஜர் ஏதோ அசௌக்கியமாய் இருக்கின்றார். ராமனை நான் அழைப்பதாக உடனே இவ்விடம் வரச்சொல்லும்.

சுமந். அப்படியே, அம்மணீ!

(போகின்றார். மந்தரை வெளியே வந்து கைகேயியிடம் ஏதோ சொல்லிவிட்டுப் போகின்றாள். ராமனும் சுமந்திரரும் வருகின்றார்கள்.)

ராம. அம்மணீ! என்ன உடம்பு என் பிதாவுக்கு? எதன் பொருட்டு என்னை உடனே வருமாறு சொல்லியனுப்பினீர்கள்?

கைகே. உன் பிதா இங்கு வந்த பிறகு ஏதோ ஒன்று ஞாபகம் வர, அதை உடனே உனக்குத் தெரிவிக்கும்படி எனக்குக் கட்டளையிட்டுவிட்டு அயர்ந்து நித்திரை செய்கின்றார்.

ராம. பிதாவின் கட்டளை எதாயிருப்பினும் நிறைவேற்றச் சித்தமாயிருக்கிறேன். அம்மணீ! அதனை உடனே எனக்குத் தெரிவிக்கவேண்டும்.

கைகே. கண்ணே, ராமசந்திரா! அதை நான் தெரிவித்தால் நீ என் மீது கோபம் கொள்ளமாட்டாயே?

ராம. அம்மா! அவ்வளவு கொடிய பாதகனோ நான்? அவ்வாறு என் மீது ஸந்தேகம் கொள்வானேன்?

கைகே. நாளை மகுடாபிஷேகத்தை நிறுத்திப் பரதனுக்குப் பட்டமளிப்பதாக வாக்குத் தத்தம் செய்தார்.

ராம. இதுதானோ? வேறொன்றுமில்லையா? எனக்கு ஏதோ கட்டளை இருப்பதாகக் கூறினீர்களே.

கைகே. ஆம், இருக்கின்றது. சூர்யோதயத்திற்குள் நீ இந்நகரைத் துறந்து தவவேஷத்துடன் கானகம் சென்று அங்கே பதி

ஞன்கு வருஷங் காலங்கழித்துவிட்டுத் திரும்பி வரவேண்டு மாம். (சுமந்திரர் போகின்றார்.)

ராம. என் பிதாவே யேவ நீரே உரைப்பதாயின் நான் உய்ந்தவனு னேன். இதோ போய் வருகின்றேன்.

(லக்ஷ்மணன் வருகின்றான்.)

லக்ஷ். ஹா ஹா! நான் உயிருடன் இருக்க யார் என் ஐயனைக் கான கத்திற் கனுப்புவது? நான் லக்ஷ்மணனேயானால் சூட்டுகின் றேன் ராமனுக்கு மகுடம். குருடன் ராஜவிழி விழிப்பதுபோல் பரதனு உலகை யாள்வது? கைகேயி! அழைத்துவா உன் சைன்யத்தை! அயோத்தி முழுதும் வந்தெதிர்க்கட்டும். நான் ஒருவனாகவே நின்று எல்லாரையும் இந்த என் கைவில்லுக்கு இரையாக்காவிட்டால் என் பெயர் லக்ஷ்மணனு? பிதா மதி மயங்கிப் பெண்வலையி லகப்பட்டுப் பகுத்தறிவில்லாமல் உளறி னால், ந்யாயத்தை நிலைநிறுத்த நான் இருக்கின்றேன்.

ராம. லக்ஷ்மணு! நீ அவ்வாறு உறுதிகொண்டிருப்பாயானால் என் மாதாவைக் காக்க நான் சன்னத்தமா யிருக்கின்றேன். முத லில் என்னைக்கொன்று பிறகு சைன்யத்துடன் யுத்தம் செய்.

(லக்ஷ்மணன் வில்லை எறிந்துவிட்டு ராமன் காலில் விழுகின்றான்.)

லக்ஷ். ஐயனே! தாம் இவ்வாறு உரைத்தால் என் கதி என்னவா வது! இதோ விடைகொடும். த்ரிமூர்த்திகள் வந்தெதிர்த்தா லும் அரைக்ஷணத்தில் நான் அவர்களை வென்று இவ்விராஜ் யத்தைத் தம்முடைய அதீனமாக்குகின்றேன்.

ராம. லக்ஷ்மணு! இதென்ன கோபம்?

லக்ஷ். அரசே! ஒரு பெண்ணினது வார்த்தையைக் கேட்டுக் கொண்டு அறிவில்லாத ஒரு அரசன், யாதொரு குற்றமுமில் லாமலிருக்க, அநியாயமாய் என் தமையனைக் காட்டிற் கனுப்பினனென்றால் எனக்குக் கோபம் வாராதோ?

ராம. நதியின் பிழையன்று நறும்புன லின்மை, யற்றே
பதியின் பிழையன்று, பயந்து நமைப்புரந்தாள்
மதியின் பிழையன்று, மகன்பிழை யன்று, மைந்த!
விதியின் பிழை, நீ இதற் கென்னை வெகுண்டதின்னே.

லக்ஷ். அண்ணா ! விதியின் பிழையா? அவ்விதிக்கும் விதியாக என் கையிலிருப்பதை மறந்துவிட்டீரோ ?

ராம. கோபத்தால் ஒன்றுமறியாமற் பேசுகிறாய். ஈன்றாளை வென்று, தாதையை வேதனைசெய்து, தம்பியைப் போர் தொலைத்து எனக்கு நீ முடிசூட்ட அதை நான் ஏற்றுக்கொண்டு அரசாள்வதில் உனக்கிஷ்டமிருந்தால் செய்.

லக்ஷ். இந்த வில்லையும், கொடியார் சொல்லும் சொல்லையும் சுமக்கிறதற்கென்றே பிறந்த நான் கோபித்துச்செய்ய என்ன இருக்கின்றது ?

(சுமித்திரை வருகின்றாள்.)

சுமித். கண்ணே ! ராமா ! உன்னைப் பிரிந்து நான் எவ்வாறு வாழ்வேன் ? கானகம் சென்று எங்களைக் கொல்வதைவிட எங்களைக் கொன்றுவிட்டுக் கானகம் செல்.

ராம. அம்மணீ ! எல்லாமறிந்த தாமே இவ்வாறு துக்கிக்கலாமோ ? நம்மாலாவது என்ன இருக்கின்றது ? எல்லாம் ஸ்ரீமந்நாராயணன் செயல் என்று நம்பும். இப்பதினான்கு வருஷத்தையும் பதினான்கு நாளாகக் கழித்துவிட்டு வருகின்றேன்.

சுமித். கண்ணே, லக்ஷ்மணா ! உன்னிடந்தான் உன் தமையனை ஒப்புவிக்கின்றேன். இவனைப் பாதுகாக்கும் வேலை உன்னுடையது. நீ என் குமாரனென்பதுண்மையாயின் தமையன் மொழியே மந்திரமென்று நம்பு. அடவியில் அரக்கர் எதிர்த்து வந்தால் தமையன்முன் நின்று, 'தம்பி உடையான் படைக்கஞ்சான்' என்னும் சொல்லை ஸ்தாபித்துக்கொள். ராமனே உன் தந்தை. ஸீதையே உன் தாய். இந்நகரே அக்கானகம். ராமனிருக்கும் அவ்வனமே வைகுண்டம் என்று நம்பு. இவ்வாறிருந்து ராமன் மனம் கோணாமல் நடந்து அவனோடுகூடவே நீ திரும்புவாயாகில் அப்பொழுதுதான் நீ என் புத்திரன்.

ராம. அம்மணீ ! விடையளியுங்கள், நாங்கள் போய் வருகின்றோம்.

(ராமன் இருவர்களையும் பிதாவையும் நமஸ்கரித்துவிட்டு லக்ஷ்மணனுடன் போகின்றார். தசரதன் பித்துப் பிடித்தவன்போல், எழுந்திருந்து

"ராமா, கௌஸல்யா!" என்று பிதற்றி "கண்ணே! கௌஸல்யா! என்னை மன்னிக்க வேண்டும். ஓர் அரக்கியின் அதீனமாகிக் கஷ்டப்படுகின்றேன்" என்று முழந்தாளிட்டு ஒருவரும் இல்லாத் திசையில் சொல்லி, அதேமாதிரி கைகேயியை வெட்டுவதுபோல் "ஹா, பாதகீ! வா, இங்கே. ஸ்த்ரீஹத்தி செய்தாவது என் ராமனை மீட்கின்றேன்" என்று சொல்லி அகஸ்மாத்தாய்க் கைகேயியைப் பிடித்து "எங்கே என் ராமன்? கேட்டதை மீட்டுக் கொள்கின்றாயா அல்லது உன் உயிரை வாங்கிவிடட்டுமா?" என்று கேட்கின்றார்.)

கைகே. ராமன் இப்பொழுதுதான் கானகம் சென்றான்.

(தசரதன் "ஹா, ராமா! ஹா, கௌஸல்யா!" என்று கூவி விழும் தருணத்தில், "நாதா! நாதா!" என்று கதறிக்கொண்டு கௌஸல்யை வந்து கணவனைத் தாங்கிக் கொள்கின்றாள்.)

---

## மூன்றாம் காட்சி

(பரத சத்ருக்னரும் கைகேயியும் ஓர் அறையில் இருக்கின்றார்கள்.)

பர. ஹா துராத்மா! இக்கொடுஞ் சொல்லை உன்னையன்றி மற்றோர் ஸ்த்ரீயும் வாய் துணிந்து சொல்லுவாளோ? அறத்தை வேரறுத்தாய்; அருளைக் கொன்றாய். என் தந்தையோ இறந்துவிட்டார். என் தமையனோ பெருந்தவம் மேற்கொண்டார். இவ்வளவுக்கும் மூலகாரணமாகிய உன்நாவைச் சேதித்திருக்க வேண்டும். தாய்போன்ற மனமுடையோனாகிய ஸ்ரீராமன் கோபிப்பனோ என்று நான் பயப்படுகிறேன். தாயென்ற பெயர் என்னைத் தடுக்கவில்லை. உன் ஒருசொல்லால் அரசன் மாளவுமாயிற்று, மற்றொரு ரசன் மீளவுமாயிற்றல்லவா? வஞ்சகியான தாய் வார்த்தையைக் கேட்டு மகா கீர்த்தியுடனே வருகிற குலத்தினுடைய சன்மார்க்கத்தைப் பரதன் அழித்துவிட்டான் என்ற பழியைச் சம்பாதித்துக்கொண்ட எனக்குக் கிரமமென்

கிறதும் உண்டோ? ஐயோ! இன்னமும் நான் உயிருடன் வாழ்கின்றேனே! என்னுடன் பிறந்த ராமன் காய் கனிகளைக் கற்பாறையில் வைத்துப் புசிக்கவும், பாவி நான் பொற்கலத்தில் அமுதுண்ணல் தகுதியோ? தற்கொலை தப்பென்றே நான்உயிருடன் தபிக்கின்றேன். தெய்வங்காள்! கற்பாறைகளைக் கொணர்ந்து இப்படுபாவியின் சிரத்தில் தள்ளி இருந்தவிடந் தெரியாமல் மறையச் செய்யீர்களோ? பூமிதேவி! தயைபுரிந்து படீரென வெடித்துப் பற்றிப் பிடித்துப் பாதகனென்னும் பாவியை நசுக்கி நாசமாக்கல் ஆகாதோ? பைசாசங்காள்!

(கௌஸல்யையும் வசிஷ்டரும் வருகின்றார்கள்.)

பசிதீர இப்பாவியைப் புசித்துப் பாழாக்கீர்களோ? அம்மா, கௌஸல்யாதேவி! என்னை மன்னிக்கவேண்டும். கனவிலும் நாடாள இச்சித்தவனல்லன். நான் இந்த ராமத்ரோகத்தை எண்ணியிருப்பேனாயின், தருமங் கெட முயன்றவனும், பிறன் கடை நின்றவனும், பிறவுயிரைக் கொன்று வாழ்ந்தவனும், துறந்தார்க்குத் துன்பம் செய்தவனும், திருமகள்கோனைக் கடவுளல்லவென்று சா ந்தவனும், தாய் பசித்திருக்கத் தான் புசித்தவனும், மக்களை கொன்ற மாபாதகனும், இவை போன்ற பாவங்களைச் செய்தோனும் அடையும் கொடியநரகை அடையக்கடவேன்.

கௌச. பரதா! ஏன் இவ்வாறெல்லாம் பேசுகின்றாய்? உன்மீதும் நான் சந்தேகம் கொள்வேனோ? உன்னை நான் அறியேனோ? வீணில் ஏன் மாதாவைக் கோபிக்கின்றாய்? என்ன செய்தாலும் மூத்தோர் மூத்தோர்களே. என் குழந்தை திரும்பி வரும்வரையில் நீ தான் எனக்கு ஆதரவு.

பரத. அம்மணி! சத்ருக்னன் இங்கிருந்து பிதாவின் கைங்கர்யத்தை முடிக்கட்டும். நான் இந்நகரில் என் தமையனையின்றி ஒரு தினமும் கழிக்கேன். இது சத்யம். விடையளியும். இதோ சென்று எப்படியாவது ராமபிரானை அழைத்துவருகின்றேன். முனிபுங்கவ! தயைகூர்ந்து தாமும் என்னுடன் வரவேண்டும்.

வசி. அப்படியே ஆகட்டும்.

கௌஸ. பரதா! கடவுள் உன்னிடம் க்ருபை புரிவாராக! ராமன் வராவிட்டால் நீயாவது திரும்பிவந்து விடு, நீயும் அங்கே தங்கி விட்டால் நான் உயிர்தரியேன்.

பரத. அதிவிரைவில் திரும்புகின்றேன் அம்மா, என் ஐயனுடன்.

---

## நான்காம் காட்சி

(சித்ரகூடம். ராமன் ஸீதை லக்ஷ்மணன்.)

ராம. வழக்கப்பட்டதும் இவ்வாழ்க்கை தங்கமுலாம் பூசிய அரண்மனையின் வாழ்வைவிட எவ்வளவு இன்பத்தைத் தருகின்றது! தரித்திரத்தின் உபயோகங்கள் மிகவும் இனிமையானவைகள். மேற்பார்வைக்கு விஷப்பாம்புபோல் அருவருப்பையும் பயத்தையும் தருவதாயினும் மாணிக்கத்தைத் தலையில் தாங்குகின்றது. பொறாமை நிறைந்த சம்ஸ்தான வாழ்க்கையைவிட எவ்வளவு நிர்ப்பயமாயிருக்கின்றது இவ்வாழ்க்கை! குளிரானது நம்மை நடுங்கச் செய்தாலும், இது முகஸ்துதியல்ல என்பது பற்றி உண்மையான சந்தோஷத்தையே தருகின்றது. இவ்வனத்திலுள்ள எல்லாப் பொருள்களும் வஞ்சகமில்லா மந்திரிகள்போல நாம் இன்னார் என்பதை ஒளியாமல் நமக்கு உபதேசிக்கின்றன.

ஸீதை. இவ்வளவு ஸுகங்களையும் என்னை விட்டுவிட்டுத் தாம் தனியாக அனுபவிக்க வல்லவோ எண்ணினீர்கள்?

ராம. என்ன உரைத்தாய், ஜானகி! நீ அருகிலிருப்பதாலன்றோ இவைகளெல்லாம் எனக்கு இன்பத்தைத் தருகின்றன. உன்னை விட்டுப் பிரிந்தால் என் மனம் உன்னையே நாடி இப்பொழுது இன்பத்தைத் தரும் இவற்றினலெல்லாம் துன்பத்தையே அடையும்.

ஸீதை. பிரிவு என்பது நமக்கு எவ்வாறு வரும்? உடல் இரண்டேயன்றி உயிர் ஒன்றேயாகையால், அதோ அம்மரமும் கொடியும் போல ஒன்றுகவே எந்நாளும் இருப்போம். அதோ அம்மான்கள் துள்ளி விளையாடுவதும், தபோராசிகளின் மகிமையால் புலிகளிடத்திலும் அச்சமில்லாமல் அவற்றின் கால்களின்

நடுவிலே புகுந்து உராய்ந்து விளையாடுவதும் மனத்துக்கு எவ்வளவு சந்தோஷத்தைத் தருகின்றன! நான் பெண்ணாய்ப் பிறந்து எவ்வளவோ மான்களுடன் விளையாடி யிருக்கின்றேன். ஆனால், லக்ஷ்மணன் இன்று எனக்குப் பிடித்துக் கொடுத்ததைப்போல் அவ்வளவு அழகானதை இதுவரையில் நான் பார்த்ததேயில்லை.

ராம. லக்ஷ்மணா! நாம் இவ்வளவு சுகமாய் இங்கே காலம் கழிக்கையில், பரதன் தனக்கு நாடு வேண்டாமென்று மறுத்துவிட்டு நம்மை நகர்க் கழைத்துச்செல்ல நம்முடைய பிதாவுடன் வருவானாயின் இதைவிட்டுச் செல்ல எனக்குச் சிறிதும் மனம் வராது.

லக்ஷ். அண்ணா! பரதனாவது பட்டம் வேண்டாமென்பதாவது! எல்லாம் அவன் சூழ்ச்சியென்றே நம்புங்கள். எது எப்படியிருப்பினும் தாம் வசிக்குமிடந்தான் எனக்கு வைகுண்டம்.

ஸீதை. நாதா! அதோ பார்த்தீர்களா, அவ்வருவிகள் திரண்டு மலையிலிருந்து புரண்டு வருகையில் கற்பாறைகளால் தடுக்கப்பட்டுச் சிதறி விழும் தருணத்தில், காட்டுப் புஷ்பத்தின் சுகந்தத்தை வஹிக்கும் எதிர்க்காற்றினால் சிதறவடிக்கப்பட்ட சிறுதுளிகள் சூர்யகிரணம் தங்கள்மீது விழுவதால் பொடிசெய்து இறைக்கப்பட்ட வைரமணியென்றே நம்பத்தக்கவைகளா யிருக்கின்றன.

ராம. அதைத்தானா பார்த்தாய்? மலைப்பாம்புகளின் தோலுரி இம்மலையிலுள்ள மூங்கிலைச் சுற்றிக்கொண்டசைவதனால் நமது அயோத்தியிலுள்ள மாளிகைகளின்மேல் அசையுந் துகிற்கொடிபோலத் தோன்றுவதைப் பார். எவ்வளவு அழகாக இருக்கின்றது! மிகுந்த அன்பினால், மொய்க்கின்ற தேனீக்களை யோட்டிவிட்டுத் தேனை முழையினின்றும் எடுத்து இளம்பிடிக்கு மதயானைகள் தருவதையும், வேடர் தினைப்புனங்காக்கும் பறையை யெடுத்து ஆண்குரங்கு அடிப்பதையும் பார். எவ்வளவு விநோதமாயிருக்கின்றது.

(ஓர் இரைச்சல் கேட்கின்றது.)

லக்ஷ். ஐயனே! என்ன திடீரென்று கோடைகாலத்திடியையும் வெட்கச்செய்யும் ஓர் பேரிரைச்சல் உண்டாகிறது? தாங்கள் இங்

கேயே வீற்றிருங்கள். நான் போய் என்னவென்று பார்த்து வருகின்றேன். (லக்ஷ்மணன் போகின்றான்.)

ராம. இது என்ன சப்தமென்று ஊகிக்கமுடியுமா உன்னால் ?

ஸீதை. மத்தகஜங்கள் ம்ருகேந்திரனால் எதிர்க்கப்பட்டுப் பிளிறி ஓடுகின்றன.

ராம. அன்று! மானிடக் கூக்குரலே இது. எவனோ ஒரு அரசன் வேட்டைக்கு வந்திருக்கையில், ம்ருகங்களால் தானே எதிர்க் கப்பட்டிருக்கின்றான்.

(லக்ஷ்மணன் வருகின்றான்.)

லக்ஷ். ரகுநாயகனே! இம்மை மறுமையென்னும் இரண்டையும் இழந்த அப்பரதனுடைய தோள்வலிமையும், அவன் படைத்த சேனையின் பெருமையும், உம்மோடு பிறந்த என்னொருமையும் காணவேண்டுகின்றேன், விடையளியும். உள்ளத்தில் பகை வைத்துக்கொண்டு வெளிக்குப் பக்ஷம்காட்டி இப்பரதன் படை கூட்டிக்கொண்டு வந்திருக்கின்றான். ஸந்தேகமில்லை. கைகேசி யிடத்துண்டான காதலால் உலகமுழுதும் வருத்தமுண்டாக் கிய அத்தசரதன் கட்டளையால் தான்பெற்ற உலகை ஆளுவதை ஒழித்துப் பரதன் இன்று என் கட்டளையால் நரகை ஆளப் போவதைப் பாரும். நாட்டைத் துறந்து நீர் காட்டுக்கு வந் ததை நினைந்து கோசலையன்னை வருந்துவதைக் கண்டு களித்த அக்கைகேயி தரையில் விழுந்தலறும்படியாகச் செய்கின்றேன்.

ராம. குழந்தாய், லக்ஷ்மணா! ஒன்று மறியாமல் வீணாய்க் கோபம் கொள்ளலாமோ ? பரதன் உள்ளத்தை நீ அறியவில்லை. தான் நாட்டை நாடாமல் நமக்கு நாட்டை யளிக்கவே வந்திருக்கின் றான். பரதனுக்கு நீ தீங்கிழைத்தால் அத்தீங்கு எனக்கிழைத்த தாகும்.

(பரதனும் வசிஷ்டரும் வருகின்றார்கள்.)

பரத. ஹா! என் ஐயனே! என் ஐயனே!

(பாதத்தில் வீழ்கின்றான், அவனை எழுப்பிவிட்டு எல்லோரும் வசிஷ்டரை வணங்குகின்றார்கள்.)

ராம. பரதா! என்ன காரணம் பற்றி இக்கோலம் கொண்டாய்? மாதா பிதாக்களெல்லாம் சுகமாய் இருக்கின்றார்களா ?

பரத. பாவி நான் எவ்வளவு பாவத்திற்காளாகினேன்! உம்மை அடவிக்கு அனுப்பியதுமன்றி உம்மைப் பிரிந்த சோகாக்னியில் தள்ளி என் ஐயனையும் கொன்ருள் அப்பாவி. அன்னையென்று உரைக்கவும் நாவெழவில்லையே.

(ஸீதையும் லக்ஷ்மணனும் ஹா! என்று கதறி மயக்கமாய் விழுகின்ருர்கள். ராமனும் பரதனும் அவர்களை எழுப்புகின்ருர்கள்.)

பரத. பிதாவும் என்னைக் கைவிட்டு விட்டார். நீர்தாம் கைகொடுத்துக் காக்கவேண்டும்.

ராம. பரதா! வீண் துக்கத்தால் பலன் யாது? எத்தனைகாலம் அழுது புரண்டாலும் போனவர் வருவரோ? நம்முடைய பிதா தம் பிதாவை இழக்கவில்லையா? அப்பிதாமஹன் தன் பிதாவைத் துறக்கவில்லையா? இவ்வுலகத்தை ஓர் ரங்கமாகக் கொண்டு அதில் நடிக்கும் நம்மை ஆட்டிவைக்கும் அச்சூத்ரதாரன் செயல் எல்லாம். பிதாவும் இல்லாதிருக்க நகரைவிட்டு நீ வருவது தர்மமா? இத்தருணத்தில் நம் ஜனங்களை யாரேனும் படையெடுத்து வந்து உபத்ரவித்தால் நம்குலத்திற்கன்றோ பழி! நான் தீட்டைக் கழித்துத் தர்ப்பணாதிகளை இந்நதிக் கரையிற் செய்கின்றேன். நீ நகரத்திற்குச் செல்.

பரத. தம்முடனன்றி அயோத்தியில் ப்ரவேசிப்பதில்லையென்று பிரதிக்ஞை செய்துவிட்டேன். தாமும் என்னுடன் திரும்பத்தான் வேண்டும்.

ராம. பரதா! நீ உரைப்பது ந்யாயமன்று. ரகுகுலத்தில் தசரத புத்ரனாய் உதித்துப் பிதுர்வாக்யபரிபாலனம் செய்யாவிட்டால் அது ஊரார் நகைக்க இடமாகும். என் வார்த்தையை நம்பு. பதினான்கு வருடமானவுடன் அவச்யம் திரும்பி வருகின்றேன்.

பரத. அதுவரையில் எனக்கும் தம்முடன் இருக்க அனுமதி தரவேண்டும்.

ராம. நீயும் இங்கிருந்தால் நம்முடைய மாதாக்கள் எவ்வாறு உயிர் தரிப்பார்கள்? கௌஸல்யாதேவியின் கதி என்னவாகும்?

பரத. அதை மறந்துவிட்டேன். கோசலையன்னைக்குக் கானகம் தங்க

மாட்டேன், அவச்யம் திரும்புவேனென்று சத்யம் செய்து விட்டேன். நகரிற் ப்ரவேசிப்பதில்லை யென்றும் சத்யம் செய்து விட்டேன். இந்தத் தர்மசங்கடத்திற்கு என்ன செய்வேன் ?

ராம. நானுரைப்பதைக் கேள். இவ் வருடங்களெல்லாம் நந்திக்ராமத்திலிருந்து நகரைப் பாதுகாத்துவா.

பரத. பதினான்கு வருடமானவுடன் அவச்யம் திரும்பவேண்டும்.

ராம. அவ்வாறே செய்கின்றேன்.

பரத. உமது பாததூளி படிந்த அவ்விருபாதுகைகளையும் அடியேனுக்கு அளிக்கவேண்டும். அவைகளை ஸிம்ஹாஸனத்தில் வைத்துப் பூஜைசெய்து வருவேன்.

ராம. இந்தா எடுத்துக்கொள்.

(பரதன் முடியில் தரித்துக்கொள்கின்றான்.)

லக்ஷ். (பரதன் பாதத்திற் பணிந்து) அண்ணா! இவ்விடத்தைவிட்டுச் செல்வதன் முன் என்னை மன்னித்ததாகச் சொல்லவேண்டும்.

பரத. லக்ஷ்மணா! மன்னிப்பதற்கு நீ என்னகுற்றம் செய்தாய் ?

லக்ஷ். தம்மையும் தம்முடைய சைன்யத்தையும் பார்த்து ஏதோ கெடுதிசெய்ய வந்தீரென்று சந்தேகம் கொண்டேன். அதற்காக மன்னிக்கவேண்டும்.

பரத. மனப்பூர்த்தியாய் மன்னித்தேன். நீ எவ்வளவு புண்ணியம் செய்தாயோ ஸ்ரீராமகைங்கர்யம் செய்ய. ஐயனே! எனக்கு விடை யளிக்கவேண்டும். (ராமனைச் சேவிக்கின்றான்.)

ராம. சுகமாய்ப் போய்வா.



# மூன்றாம் அங்கம்

## முதல் காட்சி

(லங்கையில் உத்யானவனம். ராவணன், ப்ரஹஸ்தன்.)

ராவ. ப்ரஹஸ்தா! நான் அன்று ஜானகீஸ்வயம்வரத்தில் செய்தது தவறென்றே தோற்றுகின்றது. சிவனது சிலையை ஒடித்து ஸீதையை மணந்திருக்கவேண்டும். ஏதோ ஓர் அசரீரியின் வாக்கை நம்பி இவ்வாறு கெட்டேன். அதை ஒடிப்பதனால் எனக்கென்ன அபகீர்த்தி? சீ! எவ்வளவு புத்திஹீனனாயி னேன்! அதைத்தான் செய்யவில்லையென்றால் அக்கிழங்களைக் கொன்று அக்காமினியைக் கைப்பிடித்திருக்கலாகாதா! அச் செய்கைளினால் எவ்வளவு அபகீர்த்தியை அடைந்திருந்தாலும் இப்பொழுது அம்மங்கையர்க்கரசியை நினைத்து நான் படும் அவஸ்தையைவிட அது பொறுக்கக்கூடியதாயிருந்திருக்கும். ப்ரஹஸ்தா! அம்மங்கையைக் கவர்வதற்கு என்ன செய்யலாம்?

ப்ர. தாம் ஜனகனுடன் போர்புரிந்திருக்கவேண்டுமென்று எனக் கும் அப்பொழுதே தோன்றிற்று. ஆனால், தமக்கு வேறுவித எண்ணம் தோன்றியிருக்கையில் நான் ஒன்றும் சொல்லலாகா தென்று இருந்துவிட்டேன்.

ராவ. சீ! ஏன் அப்பொழுதே வெளியிட்டிருக்கலாகாது உன் எண் ணத்தை? உன்னாலல்லவோ நான் இப்பொழுது படும் கஷ்டங்க ளெல்லாம்——

(சூர்ப்பணகை வருகின்றாள்.)

சூர். அண்ணா! அண்ணா! நீதான் என் மானத்தைக் காப்பாற்ற வேண்டும். எனக்குச் செய்த தீங்குகள் உனக்குச் செய்தவைக ளல்லவா? ஐயோ! நான் இனி எவ்வாறு என்முகத்தை வெளி யில் காட்டுவேன்?

ராவ. என்ன சூர்ப்பணகா! இதென்ன அலங்கோலம்? யார் உன்னை இவ்வாறு பங்கப்படுத்தியது? உடனே சொல். த்ரி

மூர்த்திகளாயிருப்பினும் அவர்களைப் பிடித்துவந்து உனக்கு அடிமையாக்குகிறேன்.

சூர். அண்ணா! வழக்கம்போல் நான் கானகத்தைச் சுற்றிவருகையில், மகாரூபவான்களான இரண்டுவீரர்களைப் பார்த்தேன். அவர்கள் யாரென்று விசாரித்ததில் ரகுகுலத்தில் உதித்த ராமனெனவும், அவன் சகோதரனாகிய லக்ஷ்மணனெனவும் அறிந்தேன்.

ராவ. ப்ரஹஸ்தா! அவன்தானே ஸீதையை மணந்து சென்றவன்?

சூர். ஆம். அவர்களுடன் அச்சீதையென்னும் பூலோக ஸௌந்தரியையும் பார்த்தேன்.

ராவ. த்ரிலோக ஸௌந்தரி என்று கூறவேண்டுமவளை. அவளைப் பற்றி இப்பொழுதென்ன?

சூர். அண்ணா! அவளைப் பார்த்திருக்கின்றாயோ நீ?

ராவ. நன்றாய்ப் பார்த்திருக்கின்றேன், இப்பொழுதென்ன அதற்கு?

சூர். அம்மூவரையும் பார்த்ததும் அம்மாதரசியை எப்படியாவது கவர்ந்து உன்னிடம் சேர்க்கவேண்டுமென்று எனக்கு அதிக ஆவல் உண்டாயிற்று. நான் அச்சுந்தர புருஷர்கள் அருகிற் சென்றவுடன் அத்தாபஸர்கள் என்னை இவ்வாறு பங்கப்படுத்தி உன்னையும் தூஷித்தார்கள்.

ராவ. அவ்வளவு கர்வமா அச்சிறுவர்களுக்கு? கரதூஷணாதிகளிடம் சொல்லி அவர்களைப் பிடித்து வருகின்றதுதானே இங்கு?

சூர். அதையேன் கேட்கின்றாய்? அவர்களிடம் நான் முறையிட அவர்கள் எல்லோரும் போர்புரிந்து, அக்கமலக்கண்ணனை ராமனால் மாண்டார்கள்.

ராவ. என்ன? எல்லோருமா மாண்டார்கள்?

சூர். ஆம்.

(ராவணன் கோபத்துடன் சற்று மௌனமாக உட்காருகின்றான்.)

ராவ. சரி, நீ உள்ளே செல். குற்றத்திற்குத் தக்க தண்டனை சீக்கிரத்தில் ஏற்படும். (சூர்ப்பணகை போகின்றாள்.)

இதுதான் தக்கஸமயம். அவ்விடம் நமது சைனியங்களை அனுப்பி அவர்களுடன் யுத்தம் செய்வது அசாத்யம். அவர்

களை இங்குவந்து நம்முடன் போர்புரியும்படி செய்யவேண்டும்...........ஆம், எவ்வாருவது அதைத்தான் நான் செய்ய வேண்டும். அப்படிச் செய்வதால் நம்முடைய இரண்டு எண்ணங்களையும் நிறைவேற்றிக் கொள்ளலாம். ஏதாவது ஓர் சூழ்ச்சியினுல் அவர்களிடமிருந்து ஸீதையைப் பிரித்து அவளை எடுத்து வந்து விட்டால், அவளையும் என்னுடைய துக்கத்தினின்றும் என்னை விமோசனம் செய்ய இணங்கச் செய்யலாம். அச்சிறுவர்களையும், சக்தியிருந்து கடலைக் கடந்து இங்கே வருவார்களாகில், யுத்தகளத்தில் எதிர்நின்று அவர்கள் ஜன்மமெடுத்ததின் பலன் எது என்பதை அறியச்செய்வேன். ப்ரஹஸ்தா! ஸீதையை அபகரித்துவர என்னுடன் நீயும் புறப்படவேண்டும்.

ப்ர. என்னைவிட மாமா மாரீசனை அழைத்துச் சென்ருல் மிகவும் உதவியா யிருப்பார்.

ராவ. ஆம். அது வாஸ்தவம்தான். அழைத்துவா மாரீசனை.

(ப்ரஹஸ்தன் போகின்ருன்.)

(ஆத்மகதமாய்) இன்றுதான் ப்ரஹ்மன் என்மீது கருணை புரிந்து, எனக்கென்றும் என் ஸந்தோஷத்திற்கென்றும் படைத்து, எனக்காக அவர்களிடம் வைத்திருந்த வைதேஹியை நான் அடையும் வழியை எனக்குக் காட்டினுன். என் ஜன்மம் இன்றுதான் ஸபலமாயிற்று.

(மாரீசன் வருகின்ருன்.)

மாமா! வா இப்படி.

மாரீ. குழந்தாய்! எதன்பொருட்டு என்னை அழைத்தாய்?

ராவ. மாமா! ராமலக்ஷ்மணர்களென்னும் சிறுவர்களிருவர் என் தங்கைக்கு என்ன அவமானம் செய்தார்களென்பதை நீ ப்ரஹஸ்தனிடமிருந்து அறிந்திருக்கலாம். எவ்வாருகிலும் நீ அவர்களை ஸீதையினிடமிருந்து பிரிக்கவேண்டும். அதுதான் உன் வேலை. மற்ற விஷயங்களைப்பற்றி உனக்குச் சிந்தைவேண்டாம்.

மாரீ. ராவணு! ராமபாணத்தினுடைய சக்தியை நான் அறிவேன். இப்பொழுதுகூட இரவும் பகலும் எதைப்பார்த்தாலும் ராமன்

தானோ என்று நான் பயப்படுகின்றேன். ஒவ்வொரு வ்ரு க்ஷங்களிலும் அவனையே காண்கின்றேன். ஆகையால் அவனைப் பகைத்துக்கொள்ளாதே.

ராவ. அடே மாரீசா! யாரிடம் இவ்வாறு உளறுகின்றாய்.

மாரீ. ராஜேந்திரா! இந்தவேலை என்னாலாகாது.

ராவ. நான் கூறுகிறபடி செய்கின்றாயா அல்லது என் வாளுக் கிரையாகின்றாயா? உடனே பதில் சொல்.

மாரீ. (ஆத்மகதமாய்) என் நிலைமை, தானிருக்கும் தடாகத்தின் நீர் விஷவேகத்தால் கொதிப்படைய அங்கேயும் இருக்கமாட்டாமல் கரைக்கும் போகமாட்டாமல் தத்தளிக்கும் மீனின் நிலைமையை யொத்திருக்கின்றது. இவன் குணத்தை நான் நன்றாய் அறிவேன். முடியாதென்றால் உடனே சந்தேகமின்றிக் கொலை செய்வான். இதைவிட ராமசந்திரன் பாணத்தால் இறப்பதே நலம். (ராவணனைப் பார்த்து) குழந்தாய்! நீ எவ்வளவு உறுதியாய் எண்ணம் கொண்டாயென்று அறிவதன்பொருட்டு நான் இவ்வாறு கூறினேன். நானு உனக்கு உதவி புரியாமல் இருப்பேன்? புறப்படு நாம் போவோம்.

ராவ. மாமா! இக்காரியத்தைச் செய்ய ஆரம்பிக்கும்பொழுது என் வலது கண் துடிக்கின்றது. இதனால் எனக்கு மிகுந்த கீர்த்தி வரும் என்று தோற்றுகின்றது.

மாரீ. (ஆத்மகதமாய்) ராமன் பாணத்தால் இறப்பதைவிட வேறு கீர்த்தி வீரனுக்கு இவ்வுலகில் கிடையாது. ராவணா! வீண் காலதாமதம் வேண்டாம். சீக்கிரம் புறப்படுவோம்.

---

## இரண்டாம் காட்சி

(அரண்யத்தில் பர்ணசாலை. ராமன் லக்ஷ்மணன் ஸீதை.)

ஸீதை. நாதா! எனக்கு எப்படியாவது அப்பொன்மானைப் பிடித்துத்தான் தரவேண்டும். அதோபாரும். அது துள்ளிக்குதிப்பதைப் பார்த்தால் ஸகலத்தையும் துறந்த தவச்ரேஷ்டர்களும் அதன்மீது ஆசைகொள்வார்கள்.

ராம. கண்ணே! அந்த மான் உன் மனத்தைக் கொள்ளைகொள்ளும் பொழுதே என் மனத்தையும் கொள்ளை கொண்டுவிட்டது. லக்ஷ்மணா! அதோ அம்மான் எவ்வளவு அழகாயிருக்கின்றது, பார். உன்னன்னை ஜனகநந்தினி அதை எவ்வாறாகிலும் பிடித்துத்தரவேண்டுமென்கிறாள். நீ இங்கிரு. நான் சென்று அதைப் பிடித்து வருகின்றேன். என்ன யோசிக்கின்றாய்?

லக்ஷ். அண்ணா! யாவற்றையும் அறிந்த தமக்கு நான் என்ன உரைப்பேன்? இதில் ஏதோ மோசமிருக்கின்றது. ஸ்வர்ணமானை நாம் இதுவரையில் பார்த்ததுமில்லை, அதைப்பற்றிக் கேள்வியுற்றதுமில்லை. தாம் இம்மாயைக்கு உள்ளாகலாகாது.

ஸீதை. நாதா! லக்ஷ்மணன் ஏதோ குழந்தை தெரியாத்தனமாகச் சொல்லுகின்றான். அது உயிருடன் அகப்படாவிட்டாலும், க்ருஷ்ணாஜினத்தையாவது எனக்குக் கொடுக்கவேண்டும்.

ராம. லக்ஷ்மணா! ஸ்வர்ண ஹம்ஸங்கள் இருந்ததாக நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் பார்த்ததில்லை. அம்மாதிரி ப்ரஹ்மன் ஏன் இதையும் சிருஷ்டித்திருக்கலாகாது? இதில் என்ன மோசம் இருக்கக்கூடும்? .



லக்ஷ். வேண்டாம், வேண்டாம் ஐயனே! மாயையில் வல்ல மாரீசன்தான் மோசம்செய்ய மானுருக்கொண்டு வந்திருக்கின்றான். அம்மணீ! அது ஸ்வர்ணமானுமல்ல, வர்ணமானுமல்ல, மர்மமானே. வேண்டுமானால், இக்கானகத்திலிருக்கும் எல்லா மான்களையும் பிடித்துத் தருகிறேன். இதன்மீது மாத்திரம் ஆசை கொள்ளவேண்டாம்.

ஸீதை. நாதா! இவ்வாறு பேசிக்கொண்டிருந்தால் அது எங்காவது ஓடிப்போய்விடுமே. இஷ்டமில்லாவிடில் மாட்டேனென்று கூறிவிடும். இந்தத் தாமதமெதற்கு?

ராம. நீ கேட்க நான் மாட்டேனென்று மறுப்பேனோ. லக்ஷ்மணா! ஜாக்ரதையாயிரு. ஒருவேளை உனது ஸந்தேகம் வாஸ்தவமாயிருக்கக்கூடும். அவ்வாறிருக்குமாயின் ராகவன் வில்லெடுத்தான் இன்றே ராக்கதகுலத்தை வேருடன் அழிக்க என்று

நம்புவாய். மாரீசனும் தன் மாதாவைச் சேருவான் இதே க்ஷணத்தில்.

லக்ஷ். அண்ணா! இவ்விடம் விட்டுப் போகுமுன் எனக்கோர் வரமளிக்க வேண்டும்.

ராம. என்ன?

லக்ஷ். தாம் அன்னையுடன் இங்கு வீற்றிருந்தால் நான் சென்று காரியத்தை முடிக்கின்றேன்.

ராம. வேண்டாம், நான் போய்வருகிறேன். (போகின்றார்.)

லக்ஷ். ஈசா! என்ன ஆபத்துவருமோ அறிய அசக்தனாயிருக்கின்றேன். அந்தக் கைகேயி சொன்ன மொழியைக் கேட்டு ஐயன் தசரதன் அலங்கோலமானார்.

ஸீதை. குழந்தாய், லக்ஷ்மணா! ஏன் வீணில் துக்கிக்கின்றாய்? இன்னும் சிறிது நேரத்திற்கெல்லாம் உன் ப்ராதா மானைப் பிடித்துக்கொண்டு திரும்பிவிடுவார்.

லக்ஷ். அம்மணீ! நீங்கள் என்ன கூறினபோதிலும் இது மாயமானென்றே நான் நம்புகின்றேன்.

ஸீதை. ஹா, லக்ஷ்மணா! திடீரென்று என் வலது கண் துடிக்கின்றதே! ஐயோ! என்ன ஆபத்து நேரிடப்போகின்றதோ? ஒருவேளை உன் வார்த்தையின்படி இம்மான் மூலமாய் என் பர்த்தாவுக்கு ஏதேனும் தீங்கு நேரிடுமோ?

லக்ஷ். தாயே! தாங்களெதற்கும் அஞ்சவேண்டாம். ராமபிரானுக்குத் தீங்கிழைக்கும் சக்தியுடையவர் த்ரிலோகத்திலும் கிடையாது. மாரீசன் வஞ்சக எண்ணங்கொண்டு வந்தானேயன்றி அவனால் என்ன முடியும்? இரண்டுமுறை எப்படியோ தப்பிபோய்விட்டான். இம்மூன்றாமுறை நிச்சயமாய் இறப்பான்.

ஸீதை. ஒருவேளை என் நாதன் திரும்புவதற்குள் அரக்கனெவனேனும் இங்கு வந்து நமக்கு ஏதேனும் தீங்குவிளைப்பானோ?

லக்ஷ். லக்ஷ்மணன் உயிருடன் இருக்கத் தமக்கேன் அவ்விசாரம்? அரக்கர் மன்னனே ப்ரஹ்மாதிதேவர்களைத் துணை கூட்டிக் கொண்டு வரட்டும்; லக்ஷ்மணன் வில்லெடுக்க எதிர் நிற்பார் யாவர்?

(ராமன் குரல்போல் "ஹா லக்ஷ்மணா! ஹா ஜானகி!" என்று கேட்கின்றது.)

ஸீதை. ஐயோ! நான் எதிர் பார்த்த வண்ணம் நேரிட்டதே! லக்ஷ்மணா! லக்ஷ்மணா! நீ தான் என்னைக் காக்கவேண்டும். உன் ப்ராதாவுக்கு ஏதோ தீங்கு நேரிட்டுவிட்டது. உடனே சென்று அவரைக் காப்பாற்று.

லக்ஷ். வீணில் துக்கிக்கவேண்டாம். ஒன்றுமறியாத குழந்தைபோல் பேசுகின்றீரே? ராமபிரானுக்காவது தீங்கு வருவதாவது! இதுவும் அந்த மாரீசன் மாயைதான். மனத்தைத் தேற்றிக் கொள்ளும்.

ஸீதை. இல்லை இல்லை! அவர் குரலை நான் அறியேனா? ஏதோ ஆபத்து நேரிட்டு விட்டது. ஐயோ! இன்னும் இவ்விடத்திலேயே இருக்கின்றாயே? என்முன் நில்லாதே. சீக்கிரம் செல்.

லக்ஷ். ஒரு தீங்கும் நேரிட்டிருக்காது. என்னை இவ்விடத்திலேயே இருந்து தம்மைப் பாதுகாக்கச் சொல்லியிருக்க நான் இவ்விடம் விட்டேகுவது ந்யாயமன்று. அரக்கர்கள், மோசத்தால் நம்மையும் பிரிக்க எண்ணி இவ்வாறு செய்திருக்கின்றார்கள். தாம் எவ்வளவு உரைத்தாலும் இவ்விடம் விட்டு நான் செல்வது தர்மமல்ல.

ஸீதை. ஹா ப்ராத்ருத்ரோஹீ! உன் எண்ணத்தை அறிந்துகொண்டேன். தமையன் ஒழிந்தால் என்னை அபகரிக்கலாம் என்று எண்ணுகின்றாயோ? அட பாபாசாரா! இயலாதென்னிடம் உன் மாயைகள். தமையன் மனைவியை அபகரிக்க எண்ணங்கொண்ட பாதகா! இவ்வெண்ணத்தைக் கொண்டுதான் எங்களுடன் வந்தாயோ?

லக்ஷ். ஹா! போதும் போதும்! அம்மணீ! என் செவியில் நாராசம் பாய்வதுபோலிருக்கிறது. வஞ்சக எண்ணம் சிறிதுமில்லாத என்னை இவ்வாறுரைக்கத் தெய்வம் பொறுத்திருக்கின்றதே, அதுதான் ஆச்சர்யம்! ராமப்ரபோ! உமது கட்டளையை மீறி இவ்விடம் விட்டுச் செல்வதற்காக என்னை மன்னிக்கவேண்டும். என் அன்னை சுமித்ராதேவி உம்மைப் பாதுகாத்து அழைத்து

வரக் கட்டளையிட்டிராவிடில் இந்தக்ஷணமே உயிரை விட்டுவிடுவேன். அம்மணீ! இதோ போகின்றேன். அடியனை இவ்வாறு கூறியதற்காக நான் வ்யசனப்படவில்லை. தோஷமில்லாத இடத்தில் தோஷத்தைச் சுமத்தின பாபத்தால் தமக்கு ஏதேனும் தீங்கு வந்திடுமோ என்னும் பயந்தான் எனக்கு. ஸ்ரீமந்நாராயணன் அதினின்றும் உம்மைக் காப்பாராக. நான் போய் வருகின்றேன். நான் திரும்பும் வரையில் இதோ (ஒரு கீற்றுப் போடுகின்றான்) இந்தக் கீற்றைத் தாண்டி வாராமலிருப்பதாக வாக்களிக்கவேண்டும்.

ஸீதை. அப்படியே ஆகட்டும், சீக்கிரம் செல்.

லக்ஷ். லக்ஷ்மணன் மெய்யடியனாயிருப்பின் எவனாகிலும் சரி, என் தமையனையன்றி ஸ்ரீமந்நாராயணனாய் இருப்பினும் இதைத் தாண்டி ஓரடி வைத்தாலும் உடனே பஸ்மமாகவேண்டும். ஈச்வரா! நான் திரும்பும் வரையில் நீர்தாம் காக்கவேண்டும் என் அன்னையை. (லக்ஷ்மணன் போகின்றான்.)

ஸீதை. (சற்று யோசித்துவிட்டு) ஆம்! நான் கூறியவார்த்தைகள் மிகவும் கொடியவைகள். லக்ஷ்மணனைப் பார்த்தல்லவோ கூறத் தகாத வார்த்தைகளையெல்லாம் கூறிவிட்டேன். என் நாவைச் சுட்டாலும் என் பாபம் தீராதே.

(ராவணன் சந்யாசி வேஷத்துடன் வருகின்றான்.)

ராவ. (ஆத்மகதமாய்) இதுதான் தக்கசமயம். எவ்வாறாகிலும் லக்ஷ்மணன்போட்ட கீற்றைத் தாண்டி வரவழைத்துப் பூமியுடன் பெயர்த்து எடுத்துச் செல்லவேண்டும்——நாராயணா! நாராயணா! (ஸீதையை நோக்கி) டவதி! உன் முகத்தைப் பார்த்தால் அரசகுலத்திலுதித்தவள்போல் காண்கின்றாய். ஆனால் கானகத்தில் வசிக்கின்றாய். நீ யார்?

ஸீதை. (கண்ணீரைத் துடைத்துக்கொண்டு) ஸ்வாமி தம்மைப்போன்ற தபோதனர்களைத் தவிர தெய்வம் வேறில்லை யென்றிருக்கும் ஜனகமகாராஜன் புதல்வி, தசரத சக்கரவர்த்தியின் மூத்த மருமகள், என் பெயர் ஸீதை யென்பார்கள்.

(சிற்றுக்கு வெளியில் ஆசனம்போட்டு உள்ளிருந்தபடியே உபசரிக்கிறாள்.)

ராவ. ஹா! என்ன காரியம் செய்தனை? ஓர் எளிய பிச்சைக்காரனுக்கும் பிச்சையிடல் ஆகாது, வாசற்படியின் அப்புறத்திலிருந்து. சாஸ்த்ரம் இவ்வாறிருக்க, எனக்கோ நீ பூஜை செய்கின்றாய் அவ்விடத்திலிருந்து? இதோ என்ன செய்கிறேன் பார், உன் குலத்தை!

(கமண்டலத்திலிருந்து ஜலத்தைக் கையில் எடுத்துக் கொள்கின்றான்)

ஸீதை. அடிகளே! என்னை மன்னிக்க வேண்டும். இதோ வெளியில் வந்து விட்டேன். (வெளியே வந்து சேவிக்கின்றாள்.)

ராவ. தீர்க்க ஸுமங்கலீபவ! (திடீரென்று ஸீதைக்கும் சிற்றுக்கும் நடுவில் நிற்கின்றான். அவள் பயந்து உள்ளே ஓடப்பார்க்கின்றாள்.) மறுபடியும் அதனுள் செல்லவிடமாட்டேன் உன்னை. ஜானகி! நான்யார் தெரியவில்லையா உனக்கு? முன் உன் ஸ்வயம்வரத்தில் உன்னை எவ்வாறாகிலும் அபகரித்துச் செல்வேன் என்று பிரதிக்ஞை செய்த ராவணன்.

ஸீதை. ஹா, லக்ஷ்மணா! லக்ஷ்மணா!! ஐயோ! நான் என்ன செய்வேன்!

ராவ. ப்ரலாபிப்பதில் பலனில்லை, கண்ணே!

(அருகில் போகின்றான்.)

ஸீதை. (தூரமாகச் சென்று) சீ! யாரைநோக்கி என்னவார்த்தை உரைத்தாய்? எதனிடத்திலிருந்து நீ தப்பினாலும் பாதிவ்ரதாக்கினிக்கு நீ தப்பமுடியாது. அது உன்னை அழித்தேவிடும். அடா, ராவணா! மகாயுத்தவீரனென்றும், ஜனக மகாராஜனை உனக்குத்தக்க யுத்தவீரனல்லவென்றும், என்னை மணப்பவருடன் யுத்தம்செய்து என்னை எடுத்துச் செல்வேனென்றும் சபதம் செய்துவிட்டு, வெட்கமில்லாமல் வஞ்சனை உபாயத்தால் என்னை அபகரிக்கப் பார்க்கின்றாயே. என் நாதன் வேண்டாம், லக்ஷ்மணனை எதிர்த்து வென்று என்னை எடுத்துச் செல்.

ராவ. யுத்தவீரனது லக்ஷணத்தை நான் நன்கு அறிவேன். நீ எனக்கு

உபதேசிக்க வேண்டுவதில்லை. நீயாக லங்கைக்கு வருகின்றாயா, அல்லது பலாத்காரமாக எடுத்துச் செல்லவேண்டுமா?

ஸீதை. வேண்டாம். உன் குலம் அழியும் வழியை நீயாகத் தேடிக் கொள்கின்றாய்.

ராவ. வா, இப்படி.

(ராவணன் அருகில் செல்ல அவள் வெளியே ஓடுகின்றாள். ராவணன் பின் தொடர்கின்றான். ஓர் கூக்குரல் கேட்கின்றது. சிறிதுநேரத்திற்கெல்லாம் ராமனும் லக்ஷ்மணனும் வருகின்றார்கள்.)

ராம. நம்முடைய வரவை எதிர்பார்த்து எப்பொழுதும் வெளியிலேயே நிற்பவள்......! ஐயோ! கெட்ட சகுனங்கள் நேர்ந்தனவே! ஒருவேளை தேக அசௌக்யமா என்ன! உள்ளே பார்த்து வா.

(உட்காருகின்றார். லக்ஷ்மணன் உள்ளே போகின்றான்.)

(ஆத்மகதமாய்) என்னவேலை செய்தான் அந்த மாரீசன்!

(லக்ஷ்மணன் வருகின்றான்.)

லக்ஷ்மணா! என்ன துக்கத்துடன் வருகின்றாய்? எங்கே உன் அன்னை?

(லக்ஷ்மணன் கீற்றைப் பார்க்கின்றான்.)

என்ன ஒன்று முரைக்காமல் எதையோ பார்க்கின்றாயே?

லக்ஷ். ஐயோ! எவனோ பாதகன் மோசஞ்செய்து எடுத்துச் சென்றானே என் அன்னையை!

ராம. ஹா! (மயக்கமாய் விழுகின்றார். லக்ஷ்மணன் உபசாரஞ் செய்ய மெதுவாய் எழுந்திருக்கின்றார். எழுந்திருந்து ஆகாயத்தைப் பார்த்துச் சொல்லுகின்றார்). ஹா, பாதகா! கொடுத்துவிடு. கொடுத்துவிடு என் ஜானகியை; இல்லாவிடில், (திடீரென்று கல்லென்று சிரித்து) நல்ல விளையாட்டு, கண்ணே! வா இப்படி. இம்மாதிரி என்னை அலையவைத்தாயே. ந்யாயமா இது? அஃதிருக்கட்டும். நீ இவ்வளவுநேரம் எங்கே சென்றிருந்தாய்? ஐயோ! ஐயோ! அப்பாதகன் மறுபடியும் எடுத்துச் செல்கின்றானே! கண்ணே! வந்துவிடு, வந்துவிடு!

லக்ஷ். ஐயனே !

ராம. யாரடா நீ? எடு உன் வில்லை. என் மனைவியை அபகரித்தது மன்றி என்னையுமா கொல்லப் பார்க்கின்றாய்?......நான் யார்? அப்பா! நீ யார்? ஏன் என்னைப் பின் தொடர்கின்றாய்? (லக்ஷ்மணன் காலில் வீழ்ந்து) என்னை மன்னிக்கவேண்டும். நான் ஒரு அபராதமும் செய்யவில்லையே!

லக்ஷ். ஐயோ! திடீரென்று பைத்தியம் பிடித்துவிட்டதே.

(லக்ஷ்மணன் ராமன் கையைப் பிடித்துக்கொண்டு விழித்துக் கொஞ்சநேரம் பார்த்துக் கையால் தலைமுதல் கால் வரையில் தடவிக்கொடுத்து, அதிகாரத்துடன் "எழுந்திரு" என்று சொல்லு கின்றான்.)

ராம. (மெதுவாய் நித்திரையிலிருந்து எழுந்திருப்பவர்போல்) ஹா! ஜானகி! லக்ஷ்மணா! லக்ஷ்மணா! உன் அன்னை எங்கே?

லக்ஷ். அண்ணா! மனோதைர்யமின்றி எதுவும் ஆகாது. காலடி இவ்வாறாகத்தான் போயிருக்கின்றது. வாரும், எடுத்துச் சென்றவன் எவனாயிருப்பினும் அவனுக்கு யமனாகச் செல் வோம்.

---

## மூன்றாம் காட்சி

(பம்பாதீரம். ராமலக்ஷ்மணர் உட்கார்ந்திருக்கிறார்கள்.)

ராம. லக்ஷ்மணா! ஸீதையைப்பிரிந்த துக்கத்திலேயும் கபந்தசாப விமோசனமும் சபரீதர்சனமும் எனக்கொருவித இன்பத்தைத் தருகின்றது. கபந்தனுரைத்தபடி நமக்குச் சுக்ரீவ ஸக்யமும் அவன் மூலமாய்ச் சீதையினது சேர்க்கையும் கிடைக்கக்கூடு மென்றே நம்புகின்றேன்.

லக்ஷ். முன்னம் எவ்வளவு சஞ்சலத்தை அடைந்திருந்தபோதிலும், ஸத்புருஷர்களது மனம்போல், அலை சிறிதுமில்லாத இப்பொய் கையைப் பார்க்க நமது மனமும் இப்போது சாந்தியை அடை

கின்றது. கபந்தன் கூறிய இடம் இதுதான். அதோ தெரி கின்றது அம்மலையும்.

(ஹநுமான் ஒரு ப்ரஹ்மசாரி ரூபத்துடன் வருகின்றார்.)

ஹநு. சுக்ரீவன் சங்கைக்குச் சிறிதும் ந்யாயமில்லை. இங்குள்ள சந்நிவேசங்களைப் பார்த்தால், இவர்கள் யாரோ அமானுஷ்ய மான சக்தியை உடையவர்கள்போல் காண்கின்றார்கள். இவர் களைக்கண்டதும் என் தேகம் பரவசமாகின்றது. இவர்களுக்கு அடிமை செய்யும் பாக்கியம் யாருக்குக் கிடைக்குமோ ?

ராம. லக்ஷ்மணா ! அதோ யாரோ ஒருவர் இருக்கின்றார். அவரைக் கேட்டால் இப்பர்வதத்தின் பெயரை அறியலாம். (ஹநுமானி டம் இருவரும் போகின்றார்கள்.) ஸ்வாமின் !

ஹநு. நீலமுண்ட மின்னலைப்போல் மேனியும் தாமரைபோற் கண்ணு முடைய வீரா! தங்கள் வரவு தீதில்லா வரவாகுக! தங்களைப் பார்த்தால் இப்பிரதேசத்திற்குப் புதியவர்களாகக் காண்கின் றீர்கள். அடியேனால் தங்களுக்கு ஏதேனும் ஆகவேண்டியிருந் தால் நியமிக்கலாம்.

ராம. ப்ராஹ்மணோத்தமா ! இப்பர்வதத்தின் பெயர் என்ன என்று நாங்கள் அறியலாமோ ?

ஹநு. தங்களைப் பார்த்தால் உத்தமகுலத்திலுதித்த அரசகுமாரர்கள் போல் காண்கின்றீர்கள். தாங்கள் இன்னாரென்றும் எதற்காக இப்பர்வதத்தின் பெயரைக் கேட்கின்றீர்களென்றும் அடியேன் கேட்பது தவறில்லையாகில் அறியவிரும்புகின்றேன்.

லக்ஷ். ஐயா ! சூர்யவம்சத்தில் தசரத சக்கரவர்த்தியினுடைய ஜ்யே ஷ்டபுத்ரனாகிய ஸ்ரீராமன், என் ப்ராதா, பிதுர்வாக்ய பரிபால னார்த்தம் கானகம் புகுந்து வாழ்நாட்களைக் கழிக்கையில், மாரீ சன் சூழ்ச்சியால் என் அன்னை ஸீதாதேவியிடமிருந்து அப்பிரா னும் நானும் பிரிக்கப்பட்டிருக்கையில், அரக்கனெவனோ என் அன்னையை அபகரித்துச் சென்றான். சுக்ரீவனது நட்பை ஸம்பாதித்து அன்னையை மீட்க இவ்விடம் வந்திருக்கின்றோம்.

ஹநு. அம்மாதை மீட்கச் சுக்ரீவன் சகாயம் எதற்கு? அச்சுக்ரீவனை

நாடிழந்து கானகத்தில் வசிக்கும்போது, அவனால் தங்களுக் கென்ன உபகாரம் செய்யமுடியும்?

ராம. ஐயா! இதைப்பற்றி நாங்கள் தங்களுடன் பேசுவதற்குமுன்பு தாங்கள் யாரென்று அறியலாகுமோ?

ஹநு. வீரர்காள்! அடியேன் வாயுதேவனுக்கு அஞ்சனாதேவியின் வயிற்றில் வந்தவன். என்னை ஹநுமான் என்பார்கள்.

ராம. தாங்கள் தயைபுரிந்து சுக்ரீவன் வசிக்குமிடத்தை எங்களுக் குத் தெரியப்படுத்தவேண்டும்.

ஹநு. ஸ்வாமிகாள்! நான் அந்தச் சுக்ரீவனுடைய மந்திரியாவேன். அம்மலையின் மீதிருந்து தங்கள் வரவைப்பார்த்து, வாலி, தான் அப்பர்வதத்தின்மீது வரக்கூடாததால், தங்களைப் போன்ற வீரர்களை ஏவி, எங்களை மாய்க்கப் பார்க்கின்றான் என்று எண்ணினோம். அச்சந்தேகம் தீர, விசாரிப்பதின் பொருட்டு நான் அனுப்பப்பட்டேன்.

ராம. எங்களைச் சுக்ரீவமகாராஜனிடம் அழைத்துச்செல்லவேண்டும்.

ஹநு. தங்களுக்கேன் ச்ரமம். இதோ இவ்விடத்திற்கே அவரை அழைத்து வருகின்றேன். (ஹனுமான் போகின்றார்.)

ராம. லக்ஷ்மணா! எவ்வளவு புத்திசாலியாய் இருக்கின்றான் இவ் வாஞ்சநேயன்! இவனைக்கண்டதும் என்மனத்திற்கோர் இன்பம் உண்டாகின்றது. இவன் உதவியினால் மறுபடியும் என் ஜானகியை அடைவேனென்றே தோன்றுகின்றது.

(ஹநுமானும் சுக்ரீவனும் வருகின்றார்கள்.)

சுக். செல்வர்காள்! 'திக்கற்றவருக்குத் தெய்வமே துணை' என்பது பொய்யென்று இதுவரையில் எண்ணியிருந்தேன். இப்பொழுது தான் அப்பழமொழியின் உண்மை எனக்குத் தெரியவந்தது. அதிவீரர்களாகிய தங்களைப்பற்றி நான் ஆஞ்சநேயனிடமிருந்து யாவற்றையும் அறிந்துகொண்டேன். இந்த மலையிலிருந்து வாழும் என் நிலைமையைத் தாங்கள் அறிவீர்கள் என்பதையும் தெரிந்துகொண்டேன். என்னை எவ்வாறாகிலும் வாலியினிட மிருந்து காப்பாற்றி என் மனைவியை எனக்குத் தந்து, ஆசை

யும் என் ஸ்வாதீனமாக்கினால், பின் நான் என் சேனையைக் கொண்டு ஸீதாதேவியைத் தேடித்தருகின்றேன்.

லக்ஷ். சுக்ரீவராஜனே! ரகுவீரன் வாக்களித்தபின் உனக்கென்ன குறையிருக்கின்றது? யுத்தத்திற்கு ஸன்னத்தராய் இவர் கையில் வில்லெடுத்துவிட்டால் மூன்று உலகங்களும் ஒன்று சேர்ந்து வந்தாலும் எதிர்நிற்க முடியுமோ? கிஷ்கிந்தாராஜ்யம் இன்றே உனக்குக் கிடைத்துவிட்டதாக நம்புவாய்.

ஹநு. அரசே! அன்று நாம் பேசிக்கொண்டிருக்கையில், நம் பால், ஆடையில் வைத்துக்கட்டப்பட்ட சில ஆபரணங்கள் ஆகாய மார்க்கத்தில் கதறிக்கொண்டு சென்ற ஓர் தேவியினால் எறியப் பட்டனவே; அவைகளை எங்கு வைத்திருக்கின்றீர்? ஒருவேளை அவைகள் இவ்வீரர்கள் நாடிய அம்மாதரசியின் பூஷணங்களாக இருக்கக்கூடும்.

சுக். ஆம், ஆஞ்சநேயா! நீ விரைவாகச் சென்று, தென்கிழக்குப் பாறையினடியில் வைத்திருக்கின்றேன், அதை எடுத்துவா. (ஹநுமான் போகின்றார்.) ராமபத்ரா! வாலியைக் கொன்று நாட்டை யளிப்பதாக வாக்களித்திருப்பதால் தங்களுக்குச் சில விஷயங்கள் கூறவேண்டியிருக்கின்றன. தன் எதிர் நின்று யுத்தம் செய்பவரின் பலத்தில் பாதி, தனக்கு வந்துவிடவேண்டு மென்று வாலி வரம் பெற்றிருக்கின்றான். அதுவுமன்றி அதோ தெரியும் அவ்வேழு மரங்களையும் ஓரே அம்பால் துளைக்கவும், அதனருகில் இருக்கும் அவ்வெலும்புக் குவியலைத் தூக்கவும் சக்தியுள்ளவன்தான் அவனை வெல்லக்கூடியவன் என்றோர் வதந்தியும் இங்கு உலாவுகின்றது.

லக்ஷ். சுக்ரீவா! ராகவன் சக்தியையா நீ பரீக்ஷிக்க வேண்டும்? இவ்வல்ப——

ராம. லக்ஷ்மணா! நீ உரைப்பது ந்யாயமல்ல.

(ஹநுமான் ஆபரணங்களுடன் வருகின்றார்.)

சுக். ஸ்வாமி! இவ்வணிகளைப் பாருங்கள். தங்கள் மனைவியின் ஆபரணமாக இருக்கக்கூடும். (ராமன் பார்க்கின்றார்.)

ராம. ஆம், என் ஜானகியின் அணிகலன்களே இவைகள். லக்ஷ்மணா! இதோபார். இவைகள் அடையாளம் தெரியவில்லையா உனக்கு?

லக்ஷ். நான் இவைகளை எப்பொழுதும் பார்த்ததில்லை. ஆனால், ப்ரதி தினம் காலைமாலைகளில் நான் என் அன்னையை நமஸ்கரிக்கும் பொழுது, (நூபுரத்தைக் கையிலெடுத்து) இதோ இதை மாத்திரம் பார்த்திருக்கின்றேன், என் அன்னையின் பாதத்தில்.

ராம. சுக்ரீவா! உன் குகைக்குச் சென்று ஆலோசிப்போம் வா.

---

## நான்காம் காட்சி

(அடவி. சுக்ரீவன்.)

சுக். அதோ வருகின்றான் வாலி. தாரையும் அவனைப் பின் தொடர்கின்றாள். இம்முறை ராகவன் என் மாலையை அடையாளமாகக்கொண்டு வாலியைக் குறிதப்பாமல் கொல்வாரென்று நம்புகின்றேன். இம்முறையும் அடியாதிருப்பாராயின் நான் உயிருடன் தப்புவது அசாத்யம். இன்னொருமுறை ராமனை ஞாபகப்படுத்தி வருவோம்.

(சுக்ரீவன் போகின்றான். வாலியும் தாரையும் வருகின்றார்கள்.)

வாலி. வீணில் வருத்தத்தை உண்டு பண்ணாதே. என் சத்ரு அஹங்காரத்துடன் அறைகூவி என்னை யுத்தத்திற்குஅழைக்க, நானோ அதைக் கேட்டும் வீட்டிலிருப்பது ? இவ்வளவுதூரஞ் சொல்வதால், உன்பொருட்டு அவனைக் கொல்லாமல் திரும்புகின்றேன்.

தாரை. நாதா! நீர் எவ்வளவு தைர்யத்துடனிருந்தாலும் எனக்குப் பயமாகத்தானிருக்கின்றது. காதூஷணாதிகளைச் சம்ஹரித்த ராமலக்ஷ்மணர்களென்ற இரண்டு வீரர்கள் சுக்ரீவனை நட்புக் கொண்டிருக்கின்றார்களாம். அவர்களின் உதவியை வைத்துக் கொண்டுதான் உம்மீது ஒரே தினத்தில் இரண்டாம் முறை வந்திருக்கவேண்டும். அரசே! சத்ருவாயிருப்பினும் சுக்ரீவன் தமது சகோதரன்தானே. ஸ்நேகம் பாராட்டி இளவரசைக் கொடுத்துவிடும்.

வாலி. தாரா! வாலி பயந்தானென்று தரையிகழும். ராமனைப்பற்றி எதற்குப் பயப்படவேண்டும்? இக்ஷ்வாகு குலதிலகனாகிய

அவன் என்மீது அதர்மமாக வில்லையெடுப்பானென்று எண்ணுதே. அதோ வருகின்றான் அச்சுக்ரீவன். செல், பட்டணத்திற்கு.

(தாரை போகின்றாள். சுக்ரீவன் வருகின்றான்.)

ஹா, வானர கேடவட! என்ன, உன்னையும் அறியாது குதிக்கின்றாய்? அடா சுக்ரீவா! இன்று நீ பக்நக்ரீவனாகத்தான் திரும்பப்போகின்றாய்? உதை வாங்கி ஓடி இன்னும் ஒரு நாழிகை கூட ஆகவில்லை; இதற்குள் வந்து விட்டாய். குடித்திருக்கின்றாய்போல் காண்கின்றது. இம்முறை உயிர் தப்புவதைப் பகவான் அறிவான்.

சுக். வாலி! வீணில் பிதற்றுதே. மூத்தவனென்று இவ்வளவு நாள் பொறுத்திருந்தேன். இனி உன் துர்நடத்தைகளைப் பொறுப்பது அசாத்யம். இவ்வளவுகாலம், எனக்குச் சினம் அதிகரிக்கும் தருணத்தில், உன்முன்னிருந்தால், உன்னைக் கொல்லவேண்டி வருமேயென்று திரும்பினேன். அதை நான் பயந்தோடியதாக எண்ணியிருந்தாய்போல் காண்கின்றது. இருக்கட்டும், இதோ பார், உன்னைக்கொன்று கிஷ்கிந்தைக்குச் செல்லப்போகிறேன்.

(இருவரும் கைகலந்து யுத்தம் செய்கின்றார்கள். ஓர் அம்பு வாலி மார்பின்மேல் பாய, அவன் விழுகின்றான்.)

வாலி. ஹா! (அம்பில் ராமன் பெயரைப் பார்க்கின்றான்.) தாரா! உன் வார்த்தையைத் தள்ளி வந்ததால் கூற்றிற் கிரையாகினேன்.

(ராமன் வெளியே வருகின்றார்.)

ராமா! என்ன வேலைசெய்தாய்? உன்னை எல்லோரும் புகழ்ந்துப்பேசக் கேட்டிருக்கின்றேன். ஆனால், நீ எவ்வளவு சுத்த வீரனென்பதை இப்பொழுதுதான் அறிந்தேன். வீரனுக்கழகு மறைவிலிருந்து கொல்வதுஎன்று க்ஷத்ரியர்களுக்குக்கற்பித்து உன் சூர்யகுலத்திற்கு அழிவில்லாத க்யாதியை இன்றுதேடிக் கொண்டாய். என் மனைவி தாரை என்னைத் தடுத்தபொழுது, உன்னை யோக்யனென்று நம்பி, நீ நிஷ்காரணமாய் என்மீது வில் எடுக்கமாட்டாயென்று உரைத்தேன். நான் உனக்கு இது வரையில் ஒரு தீங்கையும் இழைத்ததில்லையே. சுக்ரீவனுக்கு

அபயம் கொடுத்ததினால், என்னுடன் போர் புரியவேண்டி யிருந்தால், எதிர்நின்று வாவென்றழைப்பதன்றோ அழகு. என்னை ம்ருகமெனக்கருதினால் குடிகளுக்குத் தீங்கை விளைவிக்கும் துஷ்ட ம்ருகமா நான்? அன்றி, ஆகாரங்களுக்கு அர்ஹமான ஐந்துவித ம்ருகங்களில் ஒன்றா நான்? இவ்விரண்டுமில்லாத என்னை எதன்பொருட்டுக் கொன்றாய்? என் உயிரை மாய்த்துவிட்டாயே யென்ற வ்யசனம் எனக்குச் சிறிதுமில்லை. எனினும், உன் குலதர்மத்தைக் கைவிட்டுக் குலக்னனாய் உதித்தாயேயென்று நான் துக்கிக்கின்றேன். அரக்கன் உன்மனைவியை எடுத்துச் சென்றதற்காக என்னைக் கொன்றுவிட்டால், அவள் கிடைத்திடுவாளோ? என்னிடம் ஒரு வார்த்தை சொல்லியிருந்தால், அரக்கர் மன்னனாகிய ராவணனையே இங்குப் பிடித்து வந்து உனக்கு அடிமையாய்ச் செய்திருப்பேனே. ஆனால், உன்னை நிந்திப்பதில் என்ன பலன்? இது உன் குலதோஷம். உன் தந்தை, தன் தந்தை தாயர்கள் உண்பதற்காக நீர் மொள்ளப்போன தவசியை மறைந்துநின்று அம்பெய்து கொன்றானன்றோ. அந்த ஆசாரத்தையே நீயும் அனுஷ்டித்துவிட்டாய். தவிர, மூத்தவனை ஒழித்து இளையவனுக்குப் பட்டம் கட்டுவதும் உன் குலாசாரங்களில் ஒன்றுபோலும்!

ராம. வாலீ! சிறுகுழந்தையைப்போல் ஒன்றையும் அறிந்து கொள்ளாது ஏன் வீண்வார்த்தையாடுகின்றாய்? இக்ஷ்வாகு குலத்தினர் அதீனமல்லவோ இந்நாடுகளெல்லாம்? பரதன் நாட்டில் ந்யாயத்தை நிலைநிறுத்துகின்றான். நான் காட்டில் துஷ்க்ருத்யங்களை அடக்க வில் எடுத்திருக்கின்றேன். நீ துர்நடத்தை யுள்ளவனென்பதை உன்னால் மறுக்கமுடியாது. ஆகையால், எனக்கு நீ அபராதம் செய்யாவிட்டாலும், உன்னை நான் கொல்வது ந்யாயமே. ஏன் எதிர்நின்றுகொல்லவில்லை யென்றால், ம்ருகங்களை—எம்மாதிரியான ம்ருகமாயினும் சரி—வலை கட்டி மரத்தின்பின் நின்று அடிப்பது உலகவழக்கம். அதுவுமன்றி, எதிர்வந்தால் நீ ஒருவேளை என் காலைப்பிடித்து அபயம் என்று கேட்டுவிட்டால் என்ன செய்வது? சகோதரன் இறந்துவிட்ட

பின் அவன் மனைவியை மணம்புரிதல் சாஸ்த்ரோக்தமே. சுகோதரன் உயிருடனிருக்க, அவன் மனைவியை அபகரிப்பது ந்யாயமா? இவைகளையெல்லாம் சிறிதும் யோசிக்காமல், இறக்கும் தருணத்தில் வீண் என்மீது குற்றம் சுமத்தப் பார்க்கிறாய்?

வாலி. ஆம்! நீர் கூறுவதெல்லாம் உண்மையே. நான் மகாபாபி. என்னை மன்னித்ததாக வாய்திறந்து அருள்வீராக.

(தாரை வருகின்றாள்.)

தாரை. ஹா நாதா! என்னை இவ்வாறு விட்டுவிட்டுச் சென்றால் என் கதி என்னவாகும்? நான் எவ்வளவு கூறியும் கேட்காமல் வந்தீர்களே. இத்துராத்மாவால் தீங்கு விளையுமென்று கூறினபோது இவன் மிகவும் யோக்யனென்று கூறினீர்களே. ராமா! வாலியைக் கொன்றுவிட்டோமென்று எண்ணாதே. இதோ இங்கே விழுந்து கிடப்பது வாலியின் சரீரம். வாலியின் ஆத்துமா இதோ இருக்கின்றது, என் ஹ்ருதயத்தில். வீணில் தேகத்தைப் புண்படுத்திக் கஷ்டத்தைக் கொடுத்தல் அழகன்று. எடு உன் வில்லை. என் ஹ்ருதயத்தைப் பிளந்து வாலியைக் கொன்றுவிடு.

வாலி. தாரா! வீணில் அம்மகான் மீது கோபிக்காதே. என் பாபகார்யங்களின் பலனை நான் அனுபவிக்கின்றேன். ராகவா! என்னையும், என்பொருட்டுத் தாரையையும் நாங்கள் உரைத்த கடூர வார்த்தைகளுக்காக மன்னிக்கப் பிரார்த்திக்கிறேன்.

ராம. மனப்பூர்த்தியாய் மன்னித்தேன்.

வாலி. சுக்ரீவா! உனக்கு நான் அனேக தீங்குகளை இழைத்தேன். என்னை மன்னித்து, அங்கதனை இன்றுமுதல் உன் புத்திரனாகப் பாவிக்கவேண்டும்.

சுக். அப்படியே ஆகட்டும்.

வாலி. 'அரியவற்றுளெல்லா மரிதே பெரியாரைப்-பேணித் தமராக் கொளல்' என்றபடி நல்லோர்களுடைய சேர்க்கை கிடைப்பது அரிது. ராகவன் மனம் நோவ எதையும் செய்யாதே. இதைப் பெற்றுக்கொள். (ஒரு ஹாரத்தைக் கொடுக்கின்றான்.)

# நான்காம் அங்கம்

## முதல் காட்சி

(கிஷ்கிந்தை அரண்மனைவாயிலில் அங்கதன்
நின்றுகொண்டிருக்கின்றான்.)

அங். எவ்வளவு எடுத்துரைத்தாலும் செவி கொடுக்கவில்லை சுக்ரீவ மகாராஜன். என் அன்னை எடுத்துரைத்த அறநெறிகளெல்லாம் கடலில் கரைத்த காயம்போலப் பயனற்றவைகளாகிவிட்டன. ஆம்! காமமும் கள்ளும் ஒருங்கு சேர்ந்து மன்னனை மயக்கியிருக்க, சான்றோர் உரைப்பதைச் சிறிதும் கொள்ளாதது ந்யாயமே. இளைய பெருமான் இன்னும் பிராட்டியைத் தேடச் சைன்யம் வரவில்லையே என்று என்ன கோபம் கொண்டிருக்கின்றாரோ? செய்ந்நன்றி மறப்பதைவிடப் பாதகம் என்ன இருக்கின்றது? ஸ்ரீராமனுக்கு வாக்களித்துவிட்டு அதைப்பற்றிய சிந்தை சிறிதுமில்லாமல், சிற்றின்பத்தில் சிக்கியிருக்கும் சுக்ரீவ ராஜனுக்கு என்னென்ன விபத்துக்கள் நேரிடுமோ தெரியவில்லை? (தூரத்தில் ஒரு பாட்டுக் கேட்கின்றது) இளையவர் குரல்போலிருக்கின்றது. (பார்க்கின்றான்.) ஆம்! அவர் தாம். மிகவும் கோபத்துடன் வருகின்றார்.

(லக்ஷ்மணன் வருகின்றார்.
அங்கதன் அவர் பாதத்தில் பணிகின்றான்.)

ஐயனே! மன்னிக்கவேண்டும்.

லக்ஷ். அங்கதா! எங்கிருக்கின்றான் அச்சுக்ரீவன்? மழைக்காலம் முடிந்ததும் மாதாவைத் தேட முயற்சி செய்வதாய் மன்னனுக்கு வாக்களித்துவிட்டு, இவ்வாறு இருப்பது யாது காரணம்பற்றி? செல்வச் செருக்கா? மதுமயக்கமா? அல்லது காமத்தின் கலக்கமா?

அங். ஐயனே! தாம் இவ்வாறு கோபித்தால் நாங்கள் எக்கதி யாவது? சிறியோர்கள் செய்த பிழையைப் பொறுப்பது பெரியோர்களின் கடமையன்றோ?

லக்ஷ். சுக்ரீவனிடம் என் வரவை அறிவிப்பாய்!

(அங்கதன் போகின்றான்.)

எனது ராகவனைப்போல் உலகரீதியைச் சிறிதும் அறியாதவன் மற்றொருவன் இருக்கின்றானோ? சுக்ரீவன் செயலுக்கு மரணமன்றி மற்றோர் பிராயச்சித்தமும் உண்டோ? என்ன உரைத்தார் என் ஜ்யேஷ்டர்? "பெருஞ்செல்வம் பெற்ற உதவியைச் சிறிதேனும் அறியாமலிருக்கின்றான். ஒழுக்கத்தினின்று நீங்கினன். அறத்தை மறந்தனன். அன்பு கிடக்க, நம் பராக்ரமத்தையும் அறிந்தானில்லை. வாழ்விலே மயங்கிக் கிடக்கின்றான். நன்றியை மறந்து, நட்பினாலாகிய பந்தத்தையொழித்து, மெய்ம்மை சிதைத்து, சொல் தவறியவனைக் கொன்று களைதல் குற்றத்தினீங்கும். நீ சென்று அவனெண்ணத்தைத் தெரிந்துகொண்டுவா. நீதியாக எடுத்துச்சொல். அதற்கவன் இணங்காவிட்டால் அவன்மேற் கோபியாமல், அவன் சொன்னதை எனக்குத் தெரிவி." ராகவன் என்பால் இவ்வாறு உறுதிமொழி உரைத்திடாவிடில் சுக்ரீவனென்றொருவன் உலகில் இருந்தானென்பதையே இல்லாமற் செய்திருப்பேன்.

(தாரை வருகின்றாள்.)

தாரை. ப்ரபோ! இன்றுதான் எங்கள் ஜன்மம் ஸபலமாயின. தாசரதியை என்றும் பிரியாத தாம் இன்று அதிகோபத்துடன் தனித்துவரக் காரணம் யாதோ?

லக்ஷ். சுக்ரீவன் தான் சொன்ன சொல்லை மறந்துவிட்டதால் நான் இங்குவர நேரிட்டது.

தாரை. நாங்கள் செய்த பிழையைப்பொறுப்பது தங்கள் கடமை. தாங்களே மன்னிக்காவிட்டால் வேறு யார்தாம் மன்னிப்பார்கள். சுக்ரீவன் தான் சொன்ன சொல்லை மறந்தானல்லன். வானரங்களை அழைத்துவரத் தூதர்கள் போயிருக்கின்றார்கள். அச் சேனைகள் வந்து சேர்தலை எதிர்பார்த்துக்கொண்டு தாமதித்திருக்கின்றான். அவ்வானர சமூகங்கள் வந்து சேரும் நாளும் சமீபித்துவிட்டது. ஸ்வாமீ! உங்களாற் கிடைத்த செல்வம், உங்கள் கட்டளையினின்றுந் தவறி மிகக் களித்து

மெய்ம்மறக்கும்படியான அளவினதென்றால், அதுவும் உங்கள் பெருமையே யாகுமன்றோ? சுக்ரீவனுக்கு அரசாட்சிச் செல்வத்தோடு மனைவியை மீட்டுக்கொடுத்த உபகாரத்திற்காக, ஜானகியார்பொருட்டு நேரும் போர்க்களத்தில், வெற்றிபெறுவிடில், எதிரிகளால் மாண்டுபோகத் துணியாராயின் சிநேகம் நிலை பெறுமோ? கொடிய பகையைப்போக்கி அரசு வீற்றிருக்கச்செய்த உம்மையே இகழ்வரென்னில், இம்மையில் வறுமையெய்தி யெழுமையும் இழந்து விடுவார்களன்றோ.

(ஹனுமான் வருகின்றார்.)

லக்ஷ். ஆஞ்சநேயா! பண்டிதனான நீயும் மறந்துவிட்டாயல்லவா?

ஹநு. தாயையும் தந்தையையும் குருவையும் அந்தணரையும் பாலரையும் மாதரையும் கொன்றவர்களுக்குக் கழுவாயுண்டு. உதவி கொன்றார்க்குக் கழுவாய் கிடையாதே. இதனாலன்றோ பெரியோரும் "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை - செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்று சொல்லி யிருக்கின்றனர். நாங்கள் மறந்து விடவில்லை. வானர சேனைகள் வந்து சேர்வதை எதிர்பார்த்துக்கொண் டிருக்கிறோம். தருமாத்துமாக்களான உங்கள் விஷயத்தில் வார்த்தை தவறினால் அப்பால் எங்களுக்கு நரகந்தவிர வேறு என்ன கதி யிருக்கின்றது?

லக்ஷ். ஆஞ்சநேயா! என் ஐயன்படும் துயரத்தை அருகிலிருக்கும் நான் அறிவேன். அரண்மனையில் சுகமாய் வீற்றிருக்கும் உங்களுக்கு என்ன தெரியும்?

(அங்கதனும் சுக்ரீவனும் வருகின்றார்கள்.)

ஹா, சுக்ரீவா! செய்ந்நன்றியை மறந்து, அல்பமாகிய இந்த ஸுகத்தைப் பெரிதாகக் கருதி மதுபானத்தினால் மெய்ம்மறந்திருக்கும் உன்னை நான் மன்னித்தாலும் தெய்வம் மன்னிக்குமோ?

சுக். வீரா! பொய்யுரைத்துத் தமக்குப் போக்குக்காட்டித் தம்முடைய கோபத்தைச் சாந்தப்படுத்துவதால் நான் செய்த பெரும்பாவத்துடன் மற்றோர் பாவத்தையும் என் தலைமேல் சுமத்திக்

கொள்வதாகும். கானகத்தின்மத்தியில், வாழ்நாட்களைக் கழித்தாற் போதுமென்றிருந்த நான் ராஜ்யம் கிடைத்தவுடன் யாவற்றையும் மறந்து மதுபானத்தால் மயங்கிக் கிடந்தேன். நான் செய்த இக்குற்றத்திற்காக என்ன தண்டனை விதித்தாலும் போதாது. தலை வணங்கி இதோ நிற்கின்றேன், சிரச்சேதம் செய்யவேண்டும். ஆயினும், நான் மதுமயக்கந் தீர்ந்து ஸ்வயபுத்தியை அடைந்ததுமுதல், இதுவரையில் — ஏன், இந்த க்ஷணமும்—அன்னவனறிய, படும் மனவருத்தமே எனக்கு ஸஹிக்க முடையாத தண்டனையென்று நம்பும். இன்னும் சிறிதுகாலம் என்னை மன்னித்துப் பிராட்டியைத் தேடிவர எனக்கு அனுமதி அளிக்கவேண்டும்.

லக்ஷ். சுக்ரீவா! மனம்தளர்ந்து என் மாதாவைநாடி உன்னை நாங்கள் அடைந்திருக்க, நீ இவ்வாறு இருப்பது தர்மமா? போனது போகட்டும்; புறப்படு. ஆஞ்சநேயன் சேனைகளை அழைத்துக் கொண்டு கானகத்தை அடையட்டும்; நாம் ராகவனை உத்ஸாகப்படுத்துவோம். (எல்லோரும் போகின்றார்கள்.)

---

## இரண்டாம் காட்சி

(கடற்கரை. ஹநுமான் யோசனையில் இருக்கின்றார்.)

ஹநு. எங்கெங்குத் தேடியும் என் அன்னையைக் காணோமே. என்னை ஒரு பொருட்டாகக் கருதி, மற்றவர்களிடம் சொல்லாத ரகஸ்யங்களை யென்னிடம் சொல்லி, இக்கணையாழியையும் அடையாளமாகக் கொடுத்துத் தேவியைத் தேடிவர அனுப்பினாரே, அம்மகா ப்ரபு. அவர் முகத்தை இனி எவ்வாறு நோக்குவேன்? அந்தக்குகை ஒன்றுதான் இதுவரையில் பார்க்காதடுதன்று அதனுட்சென்று பார்த்தும் கண்ணுக்கொன்றும் புலப்படவில்லை. ஊருக்குத் திரும்புவதைவிட ப்ராணத்யாகம் செய்வதே நலமெனத் தோற்றுகின்றது.........சீ! ஆஞ்சநேயன் இன்னும் திரும்பவில்லையே என்று மிக்க மனக்லேசத்துடன் ராகவன் துடிக்க.........ஹா! அவ்வெண்ணம் மனத்தில் உண்டாகும் பொழுதே என் தேகம் முழுதும் தீப்பற்றி எரிவதுபோல்

இருக்கின்றதே! (திரும்பிப்பார்த்து) என்ன ஜாம்பவான் திடீ ரென்று முகமலர்ச்சியுடன் வருகின்றார்?

(ஜாம்பவான் வருகின்றார்.)

ஜாம். ஆஞ்சநேயா! அறிந்துகொண்டேன் அன்னையின் இருப்பி

ஹநு. என்ன! என்ன உரைத்தீர்?

ஜாம். ஜானகிதேவியைத் தேடிவந்த கார்யம் ஸபலமாயிற்று.

ஹநு. எங்கிருக்கின்றார் அம்மணி? க்ஷேமமாக இருக்கின்றாரா? பூமி யுடன் பெயர்த்தெடுத்துச் செல்வோமா கிஷ்கிந்தைக்கு?

ஜாம். அவசரமோ? ஐயோ பாவம்! அன்னையின் இருப்பிடம் எனக் கென்ன தெரியும்?

ஹநு. விளையாடுவதற்கு இதுதானா காலம்? ராமபிரான் ஒவ்வொரு விநாடியையும் ஒரு யுகமாகக் கழித்துவர, நீர் இவ்வாறு விளை யாடுவது தர்மமா உமக்கு? எங்கு இருக்கின்றார் தேவியார்? என்ன பதிலுரைக்காம லிருக்கின்றீர்?

ஜாம். அவ்வளவு அவசரமானால் தேடிப் பார்த்துக்கொள்ளலாம்.

ஹநு. கூறுகிறீரா அல்லது நான் கிஷ்கிந்தைக்குச் சென்று இளைய பெருமாளிடம் நீர் விளையாடுவதைத் தெரிவிக்கட்டுமா?

ஜாம். உயிருக்கு மிஞ்சின ஆக்கினையும் உண்டோ? இங்குவா. நிதான மாய்க் கேட்பதானால் கூறுகின்றேன்.

ஹநு. நிதானமாகத்தான் கேட்கின்றேன், கூறும்.

ஜாம். அக்குகையின் வாயிலிருந்து நீ இவ்விடம் வந்தவுடன் நாங்கள் எல்லோரும் ஸாகாதீரத்தில் உட்கார்ந்து பிராட்டியைக் காணாத தால் ப்ராணனை விட்டுவிடத் தீர்மானித்துக்கொண்டிருக்கை யில், ஒரு பக்ஷி என் பெயரைச்சொல்லி என்னைக் கூப்பிட்டது.

ஹநு. கூப்பிட்டு என்ன கூறிற்று?

ஜாம். அவ்வளவு அவசரமானால் போய்க் கேட்டுக்கொள்ளலாம்.

ஹநு. எங்கிருக்கின்றது அப்பக்ஷி? அதையாவது சொன்னால் நான் போய்க் கேட்டுக்கொள்கின்றேன்.

ஜாம். விஷ்ணுபதத்தில்.

ஹநு. நீர் சொல்வது எனக்கொன்றும் புலப்படவில்லை. சொல்வதானால் சீக்கிரமாகச் சொல்லும்.

ஜாம். நான் மெதுவாகச் சொல்லுவேன். நீ அப்புறம் சீக்கிரமாகக் கார்யத்தை முடி.

ஹநு. ஜாம்பவான் என்னும் பதத்திற்கே ஒரு தனி அர்த்தம் ஆகும்படி வயதானதிற்குப் பலன் விளையாட்டுத்தான்போலிருக்கிறது.

ஜாம். இம்மாதிரி வாயாடினால் அப்பக்ஷி கூறினதை நான் மறந்துவிடுவேன்.

ஹநு. இல்லை, இல்லை, கூறும்.

ஜாம். அப் பக்ஷியினிடம் நான் சென்று, அதை ஜடாயுவின் ப்ராதாவாகிய சம்பாதியென்று அறிந்தேன்.

ஹநு. அவரா? எங்கிருக்கின்றார்? நாம் ராகவனிடம் அழைத்துச் செல்லவேண்டாமா அவரை?

ஜாம். நீ அவரை அழைத்துச் செல்வதானால் உனக்குப் பிராட்டி இருக்குமிடத்தைக் கூறுவதில் பலனில்லை.

ஹநு. இல்லை இல்லை. பிராட்டியுடன் அவரையும் அழைத்துச் செல்வோமென்றேன்.

ஜாம் அன்னையை அரக்கர் மன்னன் லங்காபுரியில் வைத்திருப்பதாகக் கூறினார்.

ஹநு. என்ன? லங்கையிலா? ஐயோ! எவ்வாறு நாம் தேவியைத் தரிசிப்பது? கண்ணால் பாராமல் எவ்வாறு ராகவனிடம் அன்னையின் இருப்பிடத்தை அறிவிப்பது?

ஜாம். மாருதி! இது என்ன? இது நீயோ யோசிப்பது? உலகில் உதித்தவுடன் ஓர் குதிகுதித்து ஆதித்யனை அடையமுயன்ற நீயோ இவ்வாறிருப்பது? நவ வ்யாகரணங்களையும் கற்றறிந்து, ராகவனால் கார்யத்தைச் செய்யக்கூடியவன் நீதான் என்று கௌரவிக்கப்பட்ட உன்னால் ஆகாததும் உலகில் உண்டோ? நாங்கள் உயிருடன் வாழவும், உலகோர் துதிக்கவும், பிராட்டியார் மதிக்கவும், ராகவன் ஸந்தோஷிக்கவும், ராவணன் அழியவும், சான்றோர் மகிழவும் காரணமாகிய இந்த ஸமுத்ர தாரணம்

உன்னால்தான் செய்யமுடியும். நாங்கள் இவ்விடத்திலேயே இருக்கின்றோம், சீக்கிரம் புறப்படு.

ஹநு. ராமகார்யார்த்தம் மனவுறுதி செய்தவுடன் எனக்கே ஓர் குதூகலம் உண்டாகின்றது. உங்கள் ஏவலையும், ஸ்ரீராமன் அருளையும் இரண்டு சிறகாகக்கொண்டு இக்கடலைத் தாண்டி இதோ சுபமான செய்தியுடன் திரும்புகின்றேன்.

(எல்லோரும் போகின்றார்கள்.)

---

## மூன்றாவது காட்சி

(லங்கையில் அசோகவனம். ஹநுமான் தனியே நின்றுகொண்டிருக்கின்றார்.)

ஹநு. இந்நகர் முழுமையும் தேடிப்பார்த்தும் லோகமாதாவைக் காணோம். எவ்வளவு ஊக்கத்துடன் எங்கெங்குந் தேடியும் அன்னையைக் காணவில்லையே! ஒரு வேளை இவன் காத்திலிருந்து எவ்வாறாகிலும் தப்பினால் போதுமென்று, ஆகாயமார்க்கமாய் இவன் கொண்டுவருகையில், ஸாகரத்தில் விழுந்து உயிரை மாய்த்துக்கொண்டனரோ? அரக்கன் கையில் அகப்பட்டதும் பயத்தால் உயிர் உடலைவிட்டு நீங்கியதோ? அல்லது இப்பாதகன் உபத்ரவத்தைத் தாங்கமுடியாமல் தற்கொலைபுரிந்துகொண்டாரோ? இச்செய்தியுடன் ஊர்திரும்புவேனாயின் கோபம் கொண்ட சுக்ரீவனையும், கண்ணீர்விடும் காகுத்ஸ்தனையும், பரிஹஸிக்கும் பற்பல கபிகளையும் எவ்வாறு காண்பேன்? இவ்வசோக வனத்திலும் மாதாசியைக் காணாவிடின், தவவேடம் பூண்டு இவ்வரக்கர்களுக்கு இரையாய்விடுதலே நலம்? ஐயோ! கடலைக்கடந்து இங்கு வந்ததற்கு, ராவணனுடைய படுக்கையறையில் படுத்திருந்த ஸ்த்ரீயை என் மாதாவோ என்று ஸந்தேகம் கொண்டு, என் பாபத்தை அதிகமாக்கிக் கொண்டது தான் நான் அடைந்த பலன். அரக்கர்களை அழித்து என் வரவை ராவணனுக்காவது அறிவிக்கட்டுமா?... வேண்டாம், இன்னும் கொஞ்ச காலம் ஒளிந்திருந்தே தேடிப்பார்ப்போம்.

(த்ரிஜடை வருகின்றாள்.)

த்ரி. ஐயோ பாவம்! கணவனையே தெய்வமாகக்கருதி யிருந்தும் இவ்வளவு கஷ்டங்களை அனுபவிக்க ஸீதை என்ன செய்திருக்கக் கூடும்?

ஹநு. (தனக்குள்) யார் இவள்? என் அன்னையைப்பற்றிப் பேசுகின்றாள்? அருகிற்சென்று கேட்கலாமா இவளை? இன்னும் என்ன சொல்லுகின்றாளோ, இங்கிருந்தே கேட்போம்.

த்ரி. இப்பதிவ்ரதா சிரோமணிக்கே இவ்வளவு கஷ்டங்கள் உண்டானால், அல்பஸ்த்ரீகள் அனுபவிக்கவேண்டியவை எவ்வளவோ? ஐயோ! இம்மங்கையர்க்கரசி இவ்வரக்கன் கையில் சிக்கவேண்டுமோ? நான் ஒருத்தி பக்கத்தில் இல்லாதிருந்தால் அப்பொழுதே, உயிரை விட்டிருப்பாள். அதோ வருகின்றாள், பாவம்!

ஹநு. இன்றுதான் என்ஜன்மம் ஸபலமாகும்போ லிருக்கிறது.

(ஸீதை வருகின்றாள்.)

ஸீதை. த்ரிஜடா! நீ என் ஸமீபத்திலேயே இருப்பதாய் வாக்களித்துவிட்டு, எனக்குத் தெரியாமல் என்னைவிட்டு இவ்வாறு வந்துவிடுவது தர்மமா உனக்கு? நான் உனக்கு என்ன அபராதம் செய்தேன்?

த்ரி. தாயே! நீ இவ்வாறு கூறுவது எனக்கு எவ்வளவு கஷ்டத்தை உண்டுபண்ணுகின்றது தெரியுமா? நீயாவது அபராதம் செய்வதாவது, நானல்லவோ உன்னை இவ்வாறு தனியாய் விட்டுவந்ததற்காகப் படுநரகில்—

ஸீதை. த்ரிஜடா! அவ்வாறு கூறாதே. அது எப்படியிருந்தாலும் நீயும் நானும் மேலுலகில்கூட பிரியவேமாட்டோம். ஐயோ! அதோ வருகின்றானே அப்பாதகன். என்செய்வேன்? ப்ராணநாதா! ப்ராணநாதா! எவ்வாறு நான் உயிர்தரிப்பேன்!

(ராவணன் வருகின்றான்.)

ராவ. த்ரிஜடா! வெளியே செல். (த்ரிஜடை போகின்றாள்.) பெண்கள் நாயகமே! இன்னும் உன்மனம் கரையவில்லையா? பங்கஜாக்ஷி! உன் குளிர்ந்த கடைக்கண் பார்வையால் காமாக்னியால் தகிக்கப்படும் என்னைக் காக்கமாட்டாயா? நான் இவ்வளவு நாளாய்

உன்னை வேண்டியும் வாய்திறந்து ஒருமொழியும் உரைக்க மாட்டேனென்கிறாயே; ஏன் பதிலுரைக்காமலிருக்கின்றாய்? தேவாதி தேவர்களெல்லாம் வணங்கும் ராவணன் வணங்கிக் கேட்க, நீ இவ்வாறிருப்பது ந்யாயமா? உன் தூஷணமே எனக்குப் பூஷணமாகும். அம்முகத்தை நான் நன்றாய்ப் பார்க்கும்படியாய்......என்ன? நான், ராவணன்கேட்கக் காதினும் முகத்தை மூடிக்கொள்கின்றாயா? ஓர் அல்ப நான்மீது ஆசைவைத்து த்ரிலோகஜிதனாகிய என்னையோ வெறுப்பது? என்னை யாரென்று எண்ணினாய்?

வையந் தந்த நான்முகன் மைந்தன் மகன்மைந்தன்,
பொய்யில் வேதம் ஆயிரம் வல்லேன், புகழ்மிக்கேன்,
செய்யும் போரில் தேவரை வென்றேன், சிவன்தாளில்
மெய்யன் புள்ளேன், வீணையில் வல்லேன், விறல்மிக்கேன்.

இப்படிப்பட்ட என்னையா வெறுப்பது? நீ யார்மீது இச்சை வைத்திருக்கின்றாய் தெரியுமா? அறியாத கோழை. சீ! அவனைத் தூஷித்து என்ன பலன்? ஜானகி! கடைசிமுறை கூறுகின்றேன், கேள். நீயாக எனக்கு ஸுகத்தைக் கொடுக்காவிடில் உனக்குத்தான் கஷ்டம். உன் மெல்லிய அவயவங்களைக் கஷ்டப்படுத்த இஷ்டமில்லாததால் இவ்வாறு கேட்கின்றேன். நாளையதினம் வருகின்றேன். அதற்குள் உன் க்ஷேமத்திற்கும் என் சந்தோஷத்திற்கும் வழி பிறக்குமென்று நம்புகின்றேன்.

(ராவணன் போகின்றான்.)

ஸீதை. ஐயோ! ஆர்யபுத்ர! இனி என்னால் கஷ்டப்படமுடியாது. ப்ரதிதினம் இவன் உரைக்கும் மொழிகளெல்லாம் நாராசம் போல் என் செவியில் பாய்ந்து என்னைத் துன்பப்படுத்துகின்றன. உயிரை விடுவோமென்றாலும் சாஸ்திரங்கள் தற்கொலையைத் தூஷிக்கின்றன. ஆனால், நான் செய்த பாபங்களுக்கு இது தகுந்த தண்டனைதான். எனக்கு இதைமாத்ரமேயல்ல, படுநரகையும்கொடுக்க, லக்ஷ்மணனைத் தூஷித்தேனே. அந்தவொரு பாதகமே போதும். ஐயோ! நான் இறப்பதற்குமுன்

லக்ஷ்மணன் என்னை மன்னித்ததாக ஒருவார்த்தை கூறிவிட்டால் என் கதி என்னவாவது? ஐயோ!

ஹநு. (ராமனை ஸ்துதித்துப் பாடுகின்றார்.)

அரவணை யமலா போற்றி! அமரர்கள் கோவே போற்றி!
தராதல மளித்த செங்கோல் தசரதன் சிறுவா போற்றி!
பாரவரும் புகழாய் போற்றி! பங்கயக் கண்ணு போற்றி!
மராமரந் துளைத்தாய் போற்றி! ஜானகி மணளா போற்றி!

ஸீதை. யார் அங்கு? என் நாதன் பெயரை த்யானம்செய்வது? அதைக் கேட்கும்பொழுதே என்னையும் அறியாது எனக்கு ஓர்வித ஆனந்தம் உண்டாகின்றது. ஐயோ! ஒருவேளை என்னை இம்மாதிரி ஏமாற்றி, ஏதேனும் ஆபத்தை விளைவிக்க இதுவும் அவ்வஞ்சகனின் மாயையாயிருக்கலாமோ?

ஹநு. (முன்வந்து நமஸ்கரிக்கின்றார்.) தாயே! தாஸன் ஆஞ்சநேயன், ரகுநாயகனுடைய தூதன், அடிபணிந்து நிற்கின்றேன்! ஸ்ரீராமருடைய ஆக்ஞையைச் சிரமேற்கொண்டு வந்தவன் நான். அம்மணி! தாம் மௌனமாய்த் துக்கத்துடன் இருப்பதைப் பார்த்தால் அடியேன்மீது அரக்கனென்னும் ஐயம் தமக்கு இருப்பதாகத் தோற்றுகின்றது.

ஸீதை. அப்பா! பிரதிதினம் இவ்வரக்கர் மாயையினால் எத்தனை விதம் நான் பரிசோதிக்கப் படுகின்றேன் என்பது ஸ்ரீமந்நாராயணனுக்குத்தான் தெரியும். உன் முகத்தைப் பார்க்கையிலேயே நீ யோக்யனென்றுதான் எனக்குத் தோற்றுகின்றது. ஆயினும், என் பயம் என்னை விடவில்லை.

ஹநு. லோகமாதா! நான் போன ஜன்மத்தில் செய்த பாபங்கள் இவ்வாறு என்னைச்சந்தேகிக்கும்படி தம்மைத் தூண்டுகின்றன. அம்மணீ! அடியேன் ராமதூதனே. இவ்விஷயத்தில் சிறிதும் ஐயுறவேண்டாம். என்னிடத்தில் அடையாளமிருக்கின்றது. அடியேனிடம் உமக்கு நம்பிக்கை யுண்டாவதற்காக என்னிடம் அப்பெருமான் தனியேயிருந்து சொல்லி யனுப்பிய வார்த்தைகளுமுண்டு. "காட்டுவழி மெல்லியலான உன்னால் நடத்தற் கரியது. சிறிதுகாலம் தாய்மார்களுக்குப் பணிவிடைகள்

செய்துகொண்டிரு" என அப்பெருமான் கூற, அதற்குத் தாம் உடன்படாமல், உடுத்த துகிலோடும், உயிர்பிரிந்த உடலோடும், எடுத்த முனிவோடும் பக்கத்தில் வந்து நின்றீராம். சக்கரவர்த்தியின் கட்டளையை மேற்கொண்டு நாடு துறந்து காடுபோங் காலத்தில், நகரத்தின் மதிலைக் கடப்பதற்குள்ளாக, "காடு இன்னும் எத்தனை தூரம் இருக்கின்றது?" என்று கேட்டீராம். உங்களைக் காட்டில் விட்டுவிட்டுத் திரும்பும்போது, சுமந்திரரை நோக்கி, "நான் நகரத்தில் விட்டுவிட்டு வந்திருக்கிற கிளி நாகணவாய் இவைகளை நன்றாய்ப் பேசப் பழக்கிவைக்கும்படி என் தங்கைமார்களிடம் நான் சொன்னதாகச் சொல்லு" என்று சொல்லி யனுப்பினீராம். இந்த வார்த்தைகளைச் சொல்லும்படி சொன்னதோடு காகாசுர விருத்தாந்தத்தையும் தெரிவிக்கும்படி நியமித்தார். தாயே! கடைசியாக, (ஒரு மோதிரத்தைக் காட்டி) இந்த மோதிரத்தையும் அடையாளமாகக் கொடுத்தருளினார்.

ஸீதை. (மோதிரத்தைப் பெற்று, இறுகத்தழுவிப் பின் கண்ணில் ஒற்றிக்கொண்டு சிரசிலும் வைத்து) ஆஞ்சநேயா! நான் உன்மீது கொண்ட ஸந்தேகத்திற்காக என்னை மன்னிக்கவேண்டும். ஒன்றையு மறியாத லக்ஷ்மணன்மீது ஸந்தேகித்ததற்காக இவ்வளவு கஷ்டங்களையும் அநுபவிக்கின்றேன். உன்னைச் சந்தேகித்த இந்தப் பாபத்திற்காக என்னைச் சிறைமீட்டபிறகு என் நாதன் எங்கு என்மீது ஸந்தேகங் கொள்கின்றாரோ என்று பயமாயிருக்கின்றது.

ஹநு. லோகமாதாவாகிய தாம் இவ்வாறு உரைக்கலாகாது. ரகுகுல திலகனாகிய என் ஐயன் ஒருநாளும் அவ்வாறு சந்தேகிக்க மாட்டார்.

ஸீதை. அப்பா! இப்பொழுது ஆர்யபுத்ரர் எங்கிருக்கின்றார்? உன்னை எவ்வாறு நண்பனாக அடைந்து, நான் இருக்குமிடத்தை அறிந்து இங்கனுப்பினார்?

ஹநு. தாயே! தூயரான ரகுவீரர் தம்மைப் பிரிந்தபின்பு சூர்யசுதனாகிய சுக்ரீவனுக்கு அபயமளித்து, ராவணனை வாலில் கட்டிக்

கதறச்செய்த அவன் தமையன் வாலியை ஒரே பாணத்தால் உயிர்வாங்கி, கிஷ்கிந்தையில் முடிசூட்டிவைத்து, ஆரண்யத்தில் வசிக்கின்றார். அடியேன் அச்சுக்ரீவராஜனது மந்திரி. அனேக கோடி வானரர்கள் எங்களரசனால் தங்களைத்தேட அனுப்பப் பட்டிருக்கிறார்கள். அவர்களில், அடியேன் சிறிது தவமுடை யேனாயிருத்தலால், தம்முடைய திருவடியை வந்து தரிசிக்கும் படியான பேறு பெற்றேன். அனுமதி அளித்தால் இப்பூமி யுடன் பெயர்த்தெடுத்துத் தங்களை என் ஐயனிடம் ஸமர்ப்பிக் கின்றேன்.

ஸீதை. வானரச்ரேஷ்ட! உனக்கு அவ்வளவு ஸாமர்த்யம் உண் டென்பது நன்றாய்த் தெரிகின்றது. நீ என்னை எடுத்துச் செல்லுங்கால், அரக்கர்கள் உன்னை எதிர்த்தால், உனக்கே ஆபத்து நேரிடலாம். அதுவுமன்றி, நீ என்னை எடுத்துச் சென் றால் அவ்விஜய கோதண்டத்தின் ப்ரதாபத்திற்கு மாசுண்டா கும். என் ஐயனுடைய வில்லாண்மைக்குப் பழுதாமென்று கருதியே நான் இவ்வளவு துன்பங்களையும் பொறுக்கின்றேனே யன்றி, அவர்களைச் சபிக்கமுடியாமையால் கஷ்டப்படுகின்றே னென்று எண்ணாதே. இதோ இச்சூடாமணியை அடையாள மாகக் கொண்டுபோய்க் கொடு. (ஹநுமான் சூடாமணியைப் பெற் றுக்கொள்ளுகிறார்.) அவரை நேரில்வந்து அரக்கர் குலத்தை அழித்து என்னை அழைத்துச் செல்ல, நான் வேண்டிக்கொண் டதாகச் சொல். இன்னும் ஒரு மாதத்திற்குள் வாராவிட்டால் என் உயிரை விட்டுவிடுவேனென்றும் சொல்.

ஹநு. அவ்வாறே சொல்லுகின்றேன். ஆயினும் இத்தீவைவிட்டுச் செல்வதற்குமுன், ராகவனுடைய ஓர் அல்ப தூதனாகிய என் ஸாமர்த்யம் எவ்வளவென்பதையும் என் வரவையும் இவர்களுக் குத் தெரிவிக்கும்பொருட்டு, ஏதோ எனது குலோசிதமான சேஷ்டைகளைச் செய்வதற்கு அனுமதியளிக்கவேண்டும்.

ஸீதை. உன் இஷ்டம். உனக்கு ஆபத்து ஒன்றும் வாராது, பயப் படாதே. (ஹநுமான் நமஸ்கரிக்கின்றார்.)

---

## நான்காம் காட்சி

(ராவணன் கொலுமண்டபம். ராவணன், விபீஷணன், ப்ரஹஸ்தன் இன்னும் அநேகர் உட்கார்ந்திருக்கிறார்கள். ஆஞ்சநேயர் வீற்றிருக்கிறார்.)

ப்ரஹ. ஹே! குரங்கே! நீயார்? இங்குவந்த காரணம் என்ன? உன்னை இங்கு அனுப்பியது யார்? இந்திரனா? அல்லது கைலாசநாதனா? இல்லை விஷ்ணுவா? எவனாயிருந்தாலும் பயப்படாமல் சொல்.

ஹநு. இப்பொழுது நீ குறித்துச் சொன்னவர்களில் எவரும் என்னை அனுப்பவில்லை. புண்டரீகாக்ஷனாயும், ஆதிமத்யாந்தரகிதனாயும், மும்மூர்த்திகளுள்ளும் முதல்வனாயும், பிறவிப்பிணியை நீக்குகின்ற பரமௌஷதமாயும் இருக்கும் ரகுவீரனுடைய கிங்கரனாகிய அங்கதனால் அனுப்பப்பட்ட தூதன் ஆஞ்சநேயன் நான்.

ராவ. யார்? அங்கதனா? வாலிபுத்ரனன்றோ அவன்! வாலி க்ஷேமமாய் இருக்கின்றானா?

ஹநு. ராக்ஷஸேந்த்ரா! பயப்படவேண்டாம். வாலி விண்ணுலகை அடைந்துவிட்டான். அவன் இனித் திரும்பிவரவே மாட்டான். அவனோடு அவன் வாலும் போய்விட்டது. அவனை ஒரே பாணத்தால் கொன்று அவன் தம்பி சூர்யஸுதன் சுக்ரீவனுக்குப் பட்டமளித்தார் ராகவன்.

ராவ. அடே! உங்கள் குரங்குப் புத்தியைக் காட்டிவிட்டீர்களே. உங்கள் குலபூஷணமாகிய வாலியைக் கொன்றவனுக்கா அடிமைப் பட்டீர்கள், நீங்கள்.

ஹநு. அடே! நிசாசரபதி! வந்தவனுக்கு மரியாதைசெய்து ஆசனங் கொடுக்காமல், இவ்வளவு இறுமாப்புடன் சிம்ஹாசனத்தில் வீற்றிருக்கின்றாயடா? அடே! நீ கொடுக்காவிட்டாலும் நானாக உண்டாக்கிக்கொள்கின்றேன், பாரடா.

(வாலால் ஓர் ஆசனத்தைச் செய்துகொள்கின்றார்.)

ராவ. அடா, துஷ்டக் குரங்கே! மானங்கெட்ட அங்கதக் குரங்கு சொன்ன வார்த்தையும், மனிசப்பதர்களின் பெருமையும் இருக்

கட்டும். இந்த லங்காபுரியில் தூதாகப் புகுந்த நீ, ஏனடா அரக்கரைக் கொன்றாய்?

ஹநு. உன்னை எனக்குக் காட்டுவாரில்லாமையால் சோலையை வாட்டினேன். என்னைக் கொல்லவந்தார்களை வீட்டினேன். உன்னைக் காணவேண்டுமென்ற ஆலோசனையினால், பலங்குறைந்தவன் போல உன் மகனால் கட்டுப்பட்டு இங்கே வந்திருக்கிறேன்.

ராவ. அடா, துஷ்டப்பயலே! யாரைப்பார்த்து இவ்வாறு பேசினாய்? ராவணனென்று என்னை நீ அறியாயோ?

ஹநு. மகாப்ரபோ! தாங்கள் எந்த ராவணனென்பதை அடியேன் அறியலாகுமோ?

ராவ. பயலே! ராவணன் என்றால் நான் ஒருவன்தான். நான் உயிருடன் இருக்க என் பெயரை மற்றொருவன் வஹிக்கத் துணிவானோ?

ஹநு. தங்களுடைய திவ்ய நாமத்தை அபகரிக்க எவனாலும் முடியாதென்பது வாஸ்தவமே. ஆனால், கோபித்துக்கொள்ளலாகாது. நான் நாலைந்து ராவணர்களைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கின்றேன்.

ராவ. யார் அவர்கள்? சொல்; உடனே இதோ அவர்களை உன்னெதிரில் சிரச்சேதம் செய்கின்றேன்.

ஹநு. கதிபெறுங் கைலை யாற்கரம் நசுங்கிக்
கதறிய ராவண னொருவன்;
பதிபெறுங் கார்த்த வீரியன் சிறையிற்
பதுங்கிய ராவண னொருவன்;
மதிபெறும் வாலி வாலிடைப் பிணிக்க
வருந்திய ராவண னொருவன்;
துதிபெறும் பெண்ணைக் கவர்ந்தரா வணனும்
தப்பிலா னொருவன்; நீ எவனோ?

ராவ. ஹா ஹா! குரங்கே! இனி உன்னை மன்னிக்க முடியாது.

ஹநு. நீயா என்னை மன்னிப்பது? நான் உன்னை மன்னிக்கின்றேன். ராகவன் பாதத்தில் விழுந்து அபயம் என்று கேட்டுக்கொள். வாலியைக்கொன்ற வல்லவனுக்கு நீ எவ்வளவு?

ராவ. அடா குரங்கே!

(வெட்ட ?ன். விபீஷணன் தடுக்கின்ருர்.)

விபீ. அண்ணு! தாம் )ம்மாதிரி செய்யப் புகுந்தது நம்முடைய குல, நம் உசிதமல்ல.

ராவ. என்ன விபீஷணு! அந்த ாான் விஷயத்தில் முதலில் நான் கட்கத்தை எடுக்க, அபசகுனம்போல் தடை செய்கின்ருய். இவ்வானாத்தை வெட்டிஞல் உனக்கென்ன?

விபீ. தாம் வீணில் என்மீது கோபிக்கலாகாது. சைவசிரோமணியாகிய லங்கேச்வரா! சகலவேத சாஸ்த்ரங்களையும் நீர் அறிந்திருக்க, நான் எடுத்துரைக்கவேண்டியதொன்றுமில்லை. அரசர்களில் ஸ்த்ரீ ஹத்தி செய்தார்களைப்பற்றியும் கேள்வியுற்றிருக்கின்ருேம். தூதனைக் கொன்றவனென்று எவனைப்பற்றியும் கேட்டதில்லை. லோகரக்ஷகராகிய தாம் இவ்வாறு செய்யலாமா? திரிமூர்த்திகளாலும் எதிர்க்க முடியாத தாம் ஒரு குரங்கின் மேற் சென்ருல், தேவர்கள் நகைக்க இடமாகும். வீரர்கள் தூதனை அவமானப்படுத்தித் தம் புஜபராக்ரமத்தை எதிரிக்குத் தெரியப்படுத்தும்படி அனுப்பவேண்டும். இவனைக் கொன்றுவிட்டால் நம்முடைய ப்ரதாபத்தை எதிரிக்குத் தெரியப்படுத்த முடியாமற் போய்விடுமல்லவா? இவனை அனுப்பியவர்களைச் சிக்ஷித்தல் ந்யாயம். இவனைக் கொன்றுவிட்டால் இவனுடைய அரசன் எவ்வாறு தம்மைப்பற்றிக் கேள்வியுற்றுத் தமது பாணத்திற்கு இரையாவான்.

ராவ. நீ சொல்வதும் வாஸ்தவம்தான். நம்முடைய சகோதரியைப் பங்கப்படுத்தியவனுடைய தூதனகையால் இவனுடைய முக்ய அவயவமான வாலை வெட்டி விடலாம்.

வேலைக்காரன். அதைவிட இவன் வாலிலே துணியைச் சுற்றித் தீயைக் கொளுத்திவிட்டால் இன்றிரவு நகருக்கு விளக்கேற்ற வேண்டாம்.

ராவ. சந்தோஷம்! அவ்வாறே செய்யுங்கள். அதை நமக்கு ஞாபகப்படுத்தியதற்காக உனக்கு நாளையதினம் விடுமுறை.

(விபீஷணன் தவிர எல்லோரும் போகின்ருர்கள்.)

விபீ. நகருக்கே தீ மூட்டி, எங்கள் குலத்திற்குத் தீ யிடுவதுபோல் இக்காரியம் ஆரம்பமாகின்றது. எவ்வளவு ந்யாயங்களை எடுத்துரைத்தாலும் அந்த மாசற்ற மங்கையை விடமாட்டேனென்கின்றான். ஆனால் இவ்வளவு தீங்குகளுக்கும் தக்கவாறான தண்டனைகள் நெருங்கியிருந்தும், என் மனத்திற்குள் ஏதோ ஒரு வித சந்தோஷம் உண்டாகின்றது. த்ரிஜடை இம்மாதைப்பற்றி உரைப்பதில் பத்திலோர் பாகம் வாஸ்தவமாக இருப்பின், மகாலக்ஷ்மியின் அவதாரமாகத்தான் இருக்கவேண்டும். எல்லாவற்றிற்கும் ஸ்ரீமந்நாராயணன் இருக்கின்றான். (போகின்றார்.)



# ஐந்தாம் அங்கம்

## முதல் காட்சி

(தாழ்வரையில் ஒரு குகை. ராம சுக்ரீவர்கள்.)

சுக். தென்திசையை நோக்கிச் சென்றவர்கள் இதுவரை வாராததின் காரணம் யாதென்று தெரியவில்லை. ஆயினும், ஆஞ்சநேயன் அதிஸமர்த்தனாகையால் காரியம் கைகூடுமென்றே நம்பலாம்.

ராம. ஒருவேளை நல்லசெய்தியின்றித் திரும்புவதில் பயனில்லையென்று எல்லோரும் ப்ராணத்யாகம் செய்திருந்தாலும் இருக்கலாம்.

சுக். ஸ்வாமி! அச்சந்தேகம் சிறிதும் வேண்டாம். மாருதி முயற்சியால் முடியாதது மூவுலகிலுமில்லை. ஆனால், சிரஞ்சீவியாதலால் ப்ராணத்யாகம் ஒன்று மாத்திரம் ஆஞ்சநேயனால் ஆகாத காரியம். அங்கதனும் அநுமானும் ஐயமின்றி அன்னையுடன் அருகிலேயே ஐயனை அடைவார்கள். காலதாமதத்தின் காரணம் காதகனைக்கண்டு, குரங்கின் குணத்தை அக்கண்டகனுக்குக் காட்டிக் களிப்புடன் திரும்பவேண்டுமென்கிற இச்சைதான் என்பதற்குச் சந்தேகம் சிறிதுமில்லை.

(லக்ஷ்மணன் வருகின்றான்.)

லக்ஷ். அண்ணா! திடீரென்று தென்திசைப் பக்கத்திலிருந்து வானரங்களின் தைன்யத்வனியோடு கூடிய ஓர் பேரிரைச்சல் கேட்கின்றது. நமது சேனையை அரக்கர் கூட்டம் அழிக்கின்றார்கள் போல் காண்கின்றது. அநுமதி அளியும். இதோ எடுத்தேன் வில்லை. ராக்ஷஸப்பூண்டு நசித்தது இன்றுடன்.

ராம. இதென்ன இது! எனக்குங்கேட்கின்றது வானரங்களின் அழுகைக்குரல். லக்ஷ்மணா! இவ்வரக்கர்கள் செய்யும் அநீதத்தை அடக்க இவ்வாறு ஒவ்வொரு அரக்கர் கூட்டத்துடனும் போர் புரிவதைவிட, அவர்களுடைய அரசன் இருப்பிடத்தை அறிந்து அவ்விடம் சென்று அரக்கர் குலத்தையே அழித்திடல் நலமெனத் தோற்றுகின்றது.

சுக். ஹநுமானும் அங்கதனும் வந்தபின், த்ரிமூர்த்திகளையும் வெல்ல வல்ல அவ்வீரர்களுடைய உதவியுடன்தான் செல்லவேண்டும். ஆனால் ஒரு வம்சத்தை நிர்மூலமாக அழித்திடல் தர்மமன்று.

(ததிமுகன் வருகின்றான்.)

ததி. ஸ்வாமீ! தாங்கள்தாம் எங்களைக் காக்கவேண்டும். தென்திசையிலிருந்து திரும்பிவந்த அங்கதன் முதலிய வானரத் தலைவர்களெல்லாரும் தங்கள் மதுவனத்தை அழிக்கின்றார்கள். அதைத் தடுக்க முயன்றால், உள்ளே விருந்துண்போர்களுக்கு உதவியாய், வாயிலில் காவலிருக்கும் வாயுபுத்ரன் எங்களைச் சின்ன பின்னமாய் அடிக்கின்றார்.

(ஹநுமான் உள்ளிருந்து பாடிக்கொண்டே வருகின்றார். ஜாம்பவான் அங்கதன் முதலியோரும் பின்வருகிறார்கள்.)

ஹநு. கருணாநிதியே! கண்டேன் லோகமாதாவை!

ராம. ஆஞ்சநேயா! உன் கண்ணிற்குப் புலப்படுவாளோ மாட்டாளோ என்று எவ்வளவு துக்கித்துக்கொண்டிருந்தேன் தெரியுமா?

ஹநு. கண்டேன்! கண்டேன்! கற்பின் பூஷணத்தை! கருணாலயத்தைக்கண்டேன்! ஜானகியென்னும் தேவரீர் பிராணனைத் தென் சமுத்திரத்தின் மத்தியிலுள்ள லங்காபுரியில் கண்ணாரக் கண்டேன்! களங்கமற்ற பொன்னுக்குச் சமானம் அப் பொன்னே யல்லாமல் வேறுண்டோ? அதுபோல் மிகவும் பொறுமையை உடைய தனக்குச் சமானம் தானே யல்லாமல் வேறில்லையென்கிற தன்மையை யுடையராயும், உமக்குச் சமானம் உம்மைத்தவிர வேறில்லையென்கிற காரணத்தால் உமக்கு வாய்த்தவராயுமுள்ள அத்தேவியார் எனக்குச் சமானம் என்னை யல்லாமல் வேறில்லை என்கிற கீர்த்தியை எனக்குத் தந்தார்.

உன்குல முன்ன தாக்கி, யுயர்புகழ்க் கொருத்தி யாய
தன்குலந் தன்ன தாக்கித், தன்னையித் தனிமை செய்தான்
வன்குலங் கூற்றுக் கீந்தவ் வானவர் குலத்தை வாழ்வித்
தென்குல மெனக்குத் தந்தாள்; என்னினிச் செய்வ தெம்மோய்.

அந்த லங்காபுரியில் தபசுசெய்துகொண்டிருந்த ஜகன்மாதாவை நான் காணவேயில்லை. ஆனால், எதைக் கண்டேனென்று

கேட்பீராகில், குடிப்பிறப்பென்பதொன்றும் பொறுமையென்ப தொன்றும் கற்பென்பதொன்றும் ஒன்று சேர்ந்து ஸந்தோஷித்து நடனஞ் செய்திருக்கக் கண்டேன். உம்மைவிட்டுத், தவஞ்செய்த தவமாய் விளங்குகின்ற அவ்வைதேகியார் பிரிந்தா ரென்பதும், மங்கையர்க்கரசியாகிய அம்மாதாவை விட்டுத் தவ வேடம் பூண்ட தாம் பிரிந்தீரென்பதும் தவறு. ஏனெனில்,

கண்ணினு முளைநீ; தையல் கருத்தினு முளைநீ; வாயின்
எண்ணினு முளைநீ; கொங்கை யிணைக்குவை தன்னி னுயா
தண்ணல்வெங் காம னெய்த வலரம்பு தொளைத்த வாறாப்
புண்ணினு முளைநீ; நின்னைப் பிரிந்தமை பொருந்திற் றாமோ?

காலைமாலை தெரிவரியதாய், இளந்தென்றலுலாவத் திவ்யமான பரிமளம் வீசுகின்ற ஒரு குளிர்ந்த புஷ்பச்சோலைக்குள், தெய் வப்பெண்போல் எழுந்தருளியிருந்த ஜானகியாரை, உம்மைவிட் டுப் பிரிந்ததைக்குறித்துத் திருவுளமெலிந்து அழுது புலம்புத லால் பெருகிப் பாய்கின்ற கண்ணீராகிய கடல்நடுவே கண்டேன். திருமேனி நடுங்கிப் பதைக்க, இரக்கமென்பதே ஓர் பெண் வடிவுகொண்டு சிறையிருப்பதுபோலிருக்கக் கண்டேன். தேவ ரீர் தெளிவாக என்னிடஞ் சொல்லியிருந்த அடையாளங்களை யெல்லாம் சொல்லித் தேவரீர் திருவாழியையும் எடுத்துக்காட் டினேன். அதனை அப்பிராட்டியார் தொழுது வாங்கிக்கொண் டார். ஸ்வாமீ! என்ன அற்புதத்தைச் சொல்வேன்!

ஒருகணத் திரண்டு கண்டேன்; ஒளிர்மணி யாழி யூன்றத்
திருமுலைத் தடத்துள் வைத்தாள்; வைத்தலும், செல்வ! நின்பால்
விரகமென் பதனின் வந்த வெங்கொடுந் தீயி னால்வெந்
துருகியது; உடனே யாறி வலித்தது குளிர்ப்புள் ளூற.

பிறகு அந்த லோகமாதா, இச்சூடாமணியைத் தமக்குத் தரும் படி என்னிடம் கொடுத்தார்.

(ராமன் அதை வாங்கிக்கொண்டு முத்தமிடுகின்றார்.)

ராம. ஐயோ! லக்ஷ்மணா! அக்கொடிய அரக்கன் தீண்டாமல் எவ் வாறு அவ்வளவுதூரம் எடுத்துச் சென்றிருக்கக்கூடும்?

சுக். ரகுவீரா! அதைப்பற்றி ஐயம் அணுவளவும் வேண்டாம்,

முன்னொருகால் ப்ரஹ்மதேவனால் 'மனமொப்பாத பரஸ்த்ரீயைக் கரஸ்பர்சத்தால் அசுத்தமாக்கினாலும் சிரசு துண்டம் துண்டமாய் வெடித்திடும்' என்று சாபம் ராவணனுக்கு ஏற்பட்டிருக்கின்றது.

லக்ஷ். அச்சாபம் இல்லாதிருப்பினும் பாதிவ்ரதாக்னியின் மகிமையைத் தாம் அறியீரோ? மகாவிஷ்ணுவாலும் அதை எதிர்க்க முடியாது. அண்ணா! சற்று முன்பாக ஒன்றையும் அறியாது அரக்கரை அழிக்க நாம் எடுத்த அஸ்திரத்திற்கு எவ்வளவு நிசாசரர்களைப் பலியாகக் கொடுக்கப்போகின்றோம் பார்த்தீரா?

ஜாம்ப. உங்களுக்கு அவ்வாறு தோன்றியதில் ஆச்சர்யமொன்றுமில்லை. 'யானைவரும் பின்னே மணியோசைவரும் முன்னே' என்று மூத்தோர் கூறியிருப்பது பொய்யாகுமா?

அங்க. பிரபோ! சேனைகளையெல்லாம் சித்தம் செய்கின்றேன். காலத்தைப் போக்காமல் உடனே புறப்படுவோம்.

ஹநு. ஆம், ஐயனே! என் அன்னை உரைத்ததைத் தம்மிடம் நான் இன்னும் கூறவில்லை. "நான் உன்னைப் பார்த்ததினால் இன்னும் ஒருமாத பரியந்தம் உயிரோடிருப்பேன். அதற்குமேல், ஐயன் திருவடி சாக்ஷியாய் உயிர்தரியேனென்பதை உறுதியாக மனத்திலே கொள். இதை ஆர்யபுத்ரரிடத்திலும் லக்ஷ்மணனிடத்திலும் சொல்" என்றார். ஆகையால், காலதாமதஞ் செய்யாமல் உடனே புறப்படுவோம்.

சுக். எல்லாம் சித்தமாகத்தான் இருக்கின்றது. நியமனமளித்தால் உடனே புறப்படுவோம்.

ராம. எனக்கென்ன? இதோ போவோம் வாருங்கள்.

(எல்லாரும் போகிறார்கள்.)

---

## இரண்டாம் காட்சி

(கடற்கரை. ராமன் லக்ஷ்மணன் சுக்ரீவன் முதலியோர்.)

ராம. லக்ஷ்மணா! நாம் லங்கையை நோக்கிப் புறப்பட்டு வருஷங்களாகியும் இன்னும் சாகர தீரத்திலேயே இருக்கின்றோமே! எப்பொழுது என் ஜானகியைக் காண்பேன்?

லக்ஷ். இதென்ன இவ்வாறு கூறுகின்றீர்களே? நாம் புறப்பட்டுச் சில தினங்கள் கூட ஆகவில்லையே.

ராம. என்ன! சில தினங்களா? எதையேனும் அதிக ஆவலுடன் எதிர்பார்த்திருந்தால், அதை அடையும் வரையில் ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாகத் தோற்றுமென்பார்கள். நம்முடைய வாழ்வை என்னென்று சொல்வது? எனக்கே இந்தச் சில தினங்கள் பல யுகங்கள்போல் காணப்பட்டனவல்லவா? இதையெல்லாம் நோக்குமிடத்தில் எனக்கே ஓர்வித நகைப்பு உண்டாகின்றது. மாயையாம் இவ்வாழ்வில் சத்ருவெனவும் மித்ரனெனவும் இன்னும் இவ்விதமான அனேக வ்யாஜங்களையும் ஏற்படுத்தி எவ்வாறு நம்மை ஆட்டி வைக்கின்றான் அந்தப் பரமன்! நான் யார்? நீ யார்? சுக்கிரீவன் யார்? இருப்பிடத்தை விட்டு நம்மை இவ்விடம் கொணர்ந்து, எப்படியோ இருந்த ராவணனை இப்படியாக்கி, இந்த உலகிலிருக்கும் ராக்ஷஸர்கள் எல்லோரையும் பரலோகத்திற் கனுப்ப விதி நம்மை ஏவியிருப்பது எவ்வளவு ஆச்சர்யமாக இருக்கின்றது, பார்த்தாயா?

(ஓர் கூக்குரல் கேட்கின்றது.)

சுக். இதென்ன கூக்குரல்? நம்முடைய வீரர்களின் குரல்தான் இது.

(உள்ளே இருந்து "ரகுவீரா! அபயம்! அபயம்!" என்று ஒரு குரல் கேட்கின்றது.)

ராம. அங்கதா! என்பெயரைச் சொல்லி அபயம் என்று கூவியது யாரென்று பார்த்துவா. (அங்கதன் போகின்றான்.) சுக்ரீவா! வீரர்களுக்கு யுத்தகளத்தில் வெற்றி பெறுவதைவிட இன்பத்தைத் தரக்கூடியது ஒன்றுதான்இருக்கின்றது. ஒருவன் அபயம் என்று நம்மை நோக்கிக் கூவ, அச்சப்தம் நமது காதில் விழுந்தருணத்தில் நமக்குப்பெறுப்பேறு கிடைத்துவிட்டதாகப்பேரானந்த முண்டாகின்றதல்லவா? இத்தருணத்தில் நம்மை அபயமென்று அடையக்கூடியவன் யாராயிருக்கக்கூடும்? ஒரு வேளை அரக்கர் மன்னன்தானோ? அவனாயிருந்தால் ஒருவருக்கும் ஹிம்சையில்லாமல் எல்லாரும் க்ஷேமமாய்த் திரும்பலாம். (அங்கதன் வருகின்றான்.) அங்கதா! என்ன விசேஷம்? யார் வந்திருப்பது?

அங். ஸ்வாமி! வந்திருக்கின்றவன் அன்னையை அபகரித்தவனும் தேவர்குலாந்தகனுமிருக்கும் ராவணன் தம்பியாம். விபீஷணனென்று பெயராம். அவனை யார் கொல்வதென்று வானரத் தலைவர்கள் ஒருவரோடொருவர் போர் புரிந்துகொண்டிருந் தார்கள். அடியேன் அவர்களைத் தடுத்து, "நீ யார்? உன் நிலைமை என்ன?" என்று அவனைக் கேட்டேன். அதற்கு அவனுடன் வந்திருக்கும் நான்கு ராக்ஷஸர்களில் ஒருவனான அனலன் என்பவன், "இவர் சூரிய குல நாயகனாகிய ரகுவீரனைச் சரணம்புக வந்திருக்கிறார். இவர் ஜீவகாருண்யம், பிராமண விசுவாசம், விஷ்ணுபக்தி, தர்மசிந்தை, சத்யம், நடுவு நிலைமை இவைகளெல்லாம் தம்மிடம் பூரணமாக இருக்கும்படி பிரமதேவனால் அநுக்கிரகிக்கப்பட்டவர். இவர் இராவணனைப் பார்த்து, 'பதிவிரதா சிரோமணியான சீதாபிராட்டியை நீ விட்டுவிடாமற் சிறை வைத்திருப்பதானால் நமது குலத்திற்கே நாசம் நேரிடும்' என்று கூற, அதற்கு அவன் அதிக கோபம் கொண்டவனாய் 'இனி நீ க்ஷணப்பொழுதேனும் என் முன்னிருந்தால் உனக்கு மரணம் சம்பவிக்கும்' என்று உரைக்க, உடனே இவர் லங்கையையும் தாரபுத்ராதி பந்துக்களையும் விட்டுவிட்டு ஸ்ரீ ராகவனையே எல்லாவித பந்துவுமாகக்கொண்டு வந்திருக்கிறார்" என்று சொன்னான்.

ராம. சுக்ரீவா! இப்போது நான் செய்யத்தக்கதை இன்னதென்று யோஜித்து எனக்குச் சொல்லுங்கள். சேர்த்துக்கொள்ளத் தக்கவனா இவன்? அல்லது விடத்தக்கவனா?

சுக். தயாநிதே! பெற்றகாலமுதல் போஷித்து வந்த மாதாபிதாக்களையும், தனக்குமுன் ஜனித்த ப்ராதாவையும், ஆசாரியர்களையும், அரசர்களையும், யுத்தம் நேரிட்டிருக்குஞ் சமயத்தில் விட்டுப் பிரிகிறது யோக்யர்களுக்கழகல்ல. தமையனைத் தம்பி கைவிடுவதற்குத் தக்க காரணம் இருக்கவேண்டும். இச்சந்தர்ப்பத்தில் கைவிடுவது மிகவும் கொடியது. பொன்மானுருக்கொண்ட அந்த மாரீசன் தம்முடைய பெருமையையும் பராக்கிரமத்தையும் உள்ளபடி அறிந்து நடுவில் நல்லவன்போலத் தவஞ்செய்து

கொண்டிருந்தும், முடிவில் தன் ராக்ஷஸச் செய்கையையே காட்டிவிடவில்லையா? இது தெரிந்த நாம் இந்த ராக்ஷஸனுடைய இப்போதைய வேஷத்தையும் ஒழுக்கத்தையும் நம்பி மோசம் போகலாகாது.

அங். பெருமானே! ராக்ஷஸர்களில் நல்லவர்களுமுண்டோ? நெருப்பில் சுடாத நெருப்புமுண்டோ? இவனுக்கு அபயமளிப்பதானால், தேவரீருக்கும், தேவரீரை ஒரே உயிராகக்கொண்டிருக்கும் எங்களுக்கும் கெடுதி நேரும் என்பது திண்ணம்.

ஜாம். தேவா! உலகமே எதிர்த்து வந்தாலும் அஞ்சாத ராவணனது தம்பி இத்தனை சீக்கிரத்தில் சரணம் புகுந்தானென்றால், அது ஸந்தேகத்துக்கு இடமாகத்தான் இருக்கின்றது. தவிர, ராக்ஷஸவர்க்கத்தை அடியோடு தொலைப்பதாக ஸங்கற்பித்த தேவரீர், அவ்விராக்ஷஸர்களில் ஒருவனையே துணையாகக் கொண்டால், தேவரீரது பலத்துக்கே ஒரு குறைவுண்டென்று தோன்றும். இவனை ஏற்றுக்கொள்ளவே கூடாது.

ஹநு. ரகுகுலதிலகமே! தமக்கு அடியேன் சொல்ல என்ன இருக்கின்றது! அதிலும் என் அரசனே ந்யாயங்களை எடுத்துரைத்திருக்கின்றார். ஆயினும், லங்காபுரிக்குச் சென்றிருந்தபொழுது அடியேன் கண்ணாரக் கண்டறிந்த சில விஷயங்களைச் சொல்லுகின்றேன். விபீஷணரைத் தீயவனென்று சந்தேகித்தல் சிறிதும் சரியன்று. முன்னம் அடியேன் ராவணன் சமுகத்திற் சேர்ந்தபோது, அவன் என்னைக் கொல்ல முயன்ற தருணத்தில், அவனைத் தடுத்து எனக்கு உயிர்ப்பிச்சை கொடுத்த மகான் இவர்தாம். நான் பிராட்டியாரைத் தேடித் திரிகையில் இவர் திருமாளிகைக்குள் பிரவேசிக்கும்போது நல்ல சகுனங்களையும் கண்டேன். மேலும் இவருடைய புத்திரியான திரிசடையென்னும் பெண்கள் நாயகி என் அன்னையின் அருகிலிருந்து எப்பொழுதும் அவரை உத்ஸாகப்படுத்தி அவரைப் பாதுகாத்து வருகின்றாள். அப்பெண்மணி இல்லாவிடில் என் தாய் எப்பொழுதோ உயிரை விட்டிருப்பார்.

தேவர்க்குந் தானவர்க்குந் திசைமுகனே
முதலாய தேவ தேவர்
மூவர்க்கும் முடிப்பரிய காரியத்தை
முற்றுவிப்பான் மூண்டு நின்றே
ஆவத்தின் வந்தபய மென்றானை
யயிர்த்தகல விடுதி யாயின்
கூவத்தின் சிறுபுனலைக் கடலயிர்த்த
தொவ்வாதோ கொற்ற வேந்தே.

ஆகையால், இந்த விபீஷணரை அபயமளித்து ரக்ஷிப்பதில் எனக்கு ஒருவித பாதகமும் தோற்றவில்லை.

ராம. எனது அன்பிற்சிறந்த அருந்துணைவர்களே! உங்களில் சிலர் கூறியபடி விபீஷணன் சரியான எண்ணங்கொண்டு வந்தவனல்லன் என்றே வைத்துக்கொள்வோம். உள் எண்ணத்தை ஆராய்ச்சிசெய்து அதன்படி தண்டனைசெய்ய ஸ்ரீமந்நாராயணன் இருக்க, அதைப்பற்றின விசாரம் உங்களுக்கெதற்கு? எது எப்படியிருந்தாலும் அடைக்கலம் புகுந்தவன் அடைக்கலம் புகுந்தவன்தானே. ஆஞ்சநேயன் ஆலோசனையே சரியென்று எனக்குந் தோற்றுகின்றது. அடைக்கலம் புகுந்தவன் அன்னையைக்கொன்ற மாபாதகனாக இருந்தபோதிலும், அவனைக் காப்பாற்றுவது நமது கடமையல்லவா? அடைக்கலம் புகுந்தவனைக் காப்பாற்றாமல் விட்டவன் இம்மையிற் பழியையும் மறுமையில் நரகத்தையும் அடைவானென்பது நிச்சயம். என்னைக் காப்பவர் யாரென்று பொதுவாக ஜானகி கதறியபொழுது அவள்பொருட்டு ஒரு பக்ஷியாகிய ஜடாயு நான் காப்பாற்றுகிறேனென்று வலியவந்து தன் உயிரைக் கொடுக்கவில்லையா? நான் ராவணனைக்கொல்ல வில்லேந்தியது ஸீதையைக் குறித்தோ? தபசிகளுக்குக்கொடுத்த அபயவார்த்தையைக் காப்பாற்ற வேண்டுமென்றல்லவோ? மர்க்கட வ்யாக்ரகதையையும் கபோதோபாக்யானத்தையும் நீங்கள் கேட்டதில்லையா? இஃதெல்லாமிருக்க,

பிறந்தநாட் டொடங்கி யாருந் துலைபுக்க பெரியோன் பெற்றி
மறந்தாரு ளுண்டோ வென்னைச் சரணென வாழ்கின் றானைத்

துறந்தநாட் கின்று வந்து துன்னினுன் சூழ்ச்சி யாலே
இறந்தநா ளன்றே யென்று மிருந்தநா ளாவ தம்மா.

ஆகையால், அபயமென்று சொன்னமாத்திரத்தில் அபய தானம் கொடுக்கவேண்டியதே கடமை. சுக்ரீவா! கோதிலா தவனை நீயே போய் என்னிடம் அழைத்துவா. (சுக்ரீவன் போகின்றான்.) லக்ஷ்மணா! நீயேன் ஒன்றும் சொல்லாமல் மௌனமாக உட்கார்ந்திருக்கின்றாய்?

லக்ஷ். அண்ணா! நான் சொல்ல என்ன இருக்கின்றது? ஆஞ்சநேயன் வார்த்தைக்குப் பழுதும் உண்டோ. அவன் கருத்து எதுவோ அதுவே என் கருத்து.

(சுக்ரீவனும் விபீஷணரும் வருகின்றார்கள். விபீஷணர் ராமன் பாதத்தில் பணிந்து சொல்லுகின்றார்.)

விபீ. என் பாக்கியமே பாக்கியம்! லோகமாதாவைத் தம்மிடத்தி லிருந்து பிரித்த ராவணனுக்குத் தம்பியாகிய எனக்கும் அபயம் கொடுத்தீரே. பெரியோர்கள் ஸ்வபாவம் இது. ஸாகரம் தன்னை அனலெழக் கலக்கிய காலத்தும் தேவர்க்கு அமிர்தத்தைக் கொடுக்கவில்லையா? என் தமையன் துர்நடத்தையை ஸகிக்க முடியாமல் வெகுநாளாய் இளையபெருமானுடன் தேவரீர் எங்கிருக்கின்றீரோ அங்குவரத் தீர்மானித்திருந்தேன். இன்றுதான் என் ஜன்மம் ஸபலமாயிற்று. என் குலத்திற்கும் இன்றுதான் என்றுமழியாப் பெயர் கிடைத்தது. ராவணனுக்கும் தமது சரத்தால் மரணம் கிடைத்தாலன்றி அவனிழைத்த பாபங்களுக்கு விமோசனம் உண்டாகாது.

ராம. விபீஷணா! ரகுகுலத்திலுதித்த நான் அபயமளிக்க உனக்கு இனி ஒரு பயமும் வேண்டாம். வேதம் உள்ளளவும், வேதகீதம் உள்ளளவும், பாரிஜாதம் உள்ளளவும், பஞ்சபூதம் உள்ளளவும், கார் உள்ளளவும், கடல்நீர் உள்ளளவும், ஈரேழ்பார் உள்ளளவும், என்பேர் உள்ளளவும் லங்கையைக் கொடுத்தேன் உனக்கு

விபீ. பெருமானே! அடியேன் விஷயத்தில் கிருபையிருந்து அளிப்ப

தாயின், வஞ்சகனை இராவணனுக்குத் தம்பியாகப் பிறந்த இழிவு தீரும்படி, தேவரீர் திருத்தம்பியாராகிய பரதாழ்வார் திருமுடியில் எதைச் சூட்டினீரோ அந்தப் பாதுகையாகிற மகுடத்தையே அடியேனுக்குஞ் சூட்ட வேண்டுகிறேன்.

ராம. குகனொடு மைவ ரானோம் முன்பு; பின் குன்று சூழ்வான்
மகனொடு மறுவ ரானோம்; எம்முழை யன்பின் வந்த
அகனமர் காத லையா! நின்னொடும் எழுவ ரானோம்;
புகலருங் கானந் தந்து புதல்வராற் பொலிந்தா னுந்தை.



# ஆரும் அங்கம்

## முதல் காட்சி

(ராவணன் கொலுமண்டபம். ராவணன், ப்ரஹஸ்தன், மால்யவான், இந்திரஜித், கும்பகர்ணன், இன்னும் சிலர்.)

ராவ. ஸபையோர்கள்! நாம் இன்று யாது காரணம்பற்றி ஒருங்கே சேர்ந்திருக்கின்றோம் என்பது யாவருக்கும் தெரிந்த விஷயமே. ஓர் அல்ப நரன் படை கூட்டிக்கொண்டு எவ்வளவு துணிவுடன் நமது நகரை முற்றுகை போட்டிருக்கின்றான் பார்த்தீர்களா? அவனை ஒருபொருட்டாகக்கருதி அவனுடன் யுத்தம் செய்வதென்றாலும் எனக்கு வெட்கமாக இருக்கின்றது. ஆனால், வேண்டுமென்று அக்னியில் விழுந்தால் எவ்வாறு அக்னி கொளுத்தாமலிருக்கும்?...... நம்முடைய சுகன் ஏன் இன்னும் வரவில்லை?

ப்ரஹ. ஏனோ தெரியவில்லை, இன்னும் வரக்காணோம்.

ராவ. ப்ரஹஸ்தா! நீ என்ன சொல்லுகின்றாய்? இந்த மனிதப்பூச்சிகளுடன் எப்படி யுத்தம் செய்யலாம்? யாரை அனுப்பலாம்?

ப்ரஹ. தாங்கள் அவர்களுடன் யுத்தம் செய்வது யுக்தமல்ல. நம்முடைய சேனைத்தலைவர்களில் யாரையாவது அனுப்புவோம்—திரும்பிவந்தால் சந்தோஷம், இல்லாவிட்டாலும் நஷ்டமில்லை.

(சுகன் வருகின்றான்.)

சுகா! என்ன விசேஷம்? எத்தனை வானரங்கள் வந்திருக்கின்றன? நம்முடைய படைத்தலைவர்கள் எவரும் போகவேண்டிய அவச்யமில்லையே?

சுக. போனாலும் ஒன்றுதான், போகாவிட்டாலும் ஒன்றுதான்.

ராவ. என்ன அவ்வாறு கூறுகின்றாய்?

சுக. இல்லை, நான்தானே என்று கூறினேன்.

ப்ரஹ. சந்தோஷம்! உனக்கு, முன் இருந்ததைவிட உயர்ந்த உத்யோகம் கொடுக்கின்றேன்.

சுக. கொடுக்கவேண்டிய ப்ரபு வேறொருவர்.

ராவ. யாரடா அவன்? என்ன பிதற்றுகின்றாய்?

சுக. ப்ரபுவைப்பற்றித்தான் கூறினேன். நான் போனகார்யம் அனுகூல மாகிவிட்டது.

ப்ரஹ. என்ன? பயம் ஒன்றுமில்லையே—அவனுக்கு?

சுக. ஸந்தேகம் உள்ளவரையில்தான் பயம் இருக்கும். ஜயம் யாருடையதென்று நிச்சயமாகிவிட்டால் பயம் எப்படி இருக்கும்? இங்கிருந்து சென்றேன். காலதாமதமில்லாமல் உடனே புறப்பட்டு நேராக அவ்விடத்திற்குச் சென்றேன். சென்றவிடத்தில் பார்த்தேன்——

ப்ரஹ. என்ன பார்த்தாய்?

சுக. கணக்கில்லாமல் வந்திருக்கின்றார்கள் — ஆனாலும், எல்லாம் குரங்குகள்.

ராவ. முன் இங்கு வந்தானே, அவன் இருக்கின்றானா பார்த்தாயா? அவனைப் பிடித்துத் தக்க தண்டனை விதிக்கவேண்டும். என்ன சொல்லுகின்றாய் ப்ரஹஸ்தா?

ப்ரஹ. அவன் இங்கிருந்து திரும்பும்பொழுது ஸாகரத்தில் விழுந்து இறந்துவிட்டதாகக் கேள்விப்பட்டேன். அப்படி அவன் இறக்காமல் இருந்தாலும், ஐயோ பாவம் பிழைத்துப் போகட்டும்.

(ஓர் வேலையாள் வருகின்றான்.)

வேலை. ராஜேந்திரா! ஏதோ ஓர் குரங்கு, ராமதூதனும், வந்திருக்கின்றது.

ப்ரஹ. யாரவன்! முன் இங்கு வந்திருந்தானே அவனா?

வேலை. இல்லை இல்லை; இவன் வேறொருவன்.

ராவ. வரச்சொல். (வேலையாள் போகின்றான்.)

(அங்கதன் வருகின்றான்.)

அங்க. தசக்ரீவா! உன் விஷயத்தில் இன்னமும் இரக்கம் பாராட்டுகின்ற என் ஐயன் உன் எண்ணத்தை அறிந்துவரக் கடைசிமுறை என்னைத் தூதாக அனுப்பியிருக்கின்றார். பிராட்டியை அவரிடம் சேர்ப்பித்து அவர் பாதத்தைப் பணிந்து விபீஷணனுக்குப் பட்டத்தை அளிப்பதானால், உன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளலாம்.

ராவ. அடே, குரங்கே! இவ்வார்த்தைகளைக் கூறிய நீ யாரடா?

அங். அடா, அரக்கப்பதரே! நான் யாரா? கூறுகின்றேன் கேள். சிறு வயதில் சிரித்து விளையாடுவதின் பொருட்டு ராவணனை யோர் பதுமையாகக் கருதிக் கரத்தால் கட்டி விளையாடினனே அந்த அங்கதன் நான். முன்னம் தசக்ரீவனை ச்வாசம் திண்டாடும்படி, பூலோக ப்ரதக்ஷிணத்தின்பொழுது கைதியாகக் கட்டிச் சென்றாரே அந்த வாலியின் புத்திரனாகிய அங்கதன் நான். சில தினங்களுக்கு முன்பாக லங்காபதியின் சிரத்திலிருந்த கிரீடங்களை அடித்தெடுத்துச் சென்றாரே அச்சுக்ரீவராஜனுக்கு அண்ணன் மகனாகிய அங்கதன் நான். ஒரே பாணத்தால் வாலியை வென்ற வீரனுடைய கிங்கரனாகிய அங்கதன் நான். நிசாசரகுல காலனையும், தாடித தாடகா குடும்பகனையும், கரதூஷண தஹித காலாக்னியாயும், சூர்ப்பணகா பங்கஞ்செய்த லக்ஷ்மண ப்ராதாவாயும், ராவணாரவ ஸந்தோஷித ஸீதாமுக பத்மபாஸ்கரனாய் விளங்கப்போகின்றவனையுமுள்ள ஸ்ரீராமசந்திரனுடைய தூதனாகிய அங்கதன்நான். தெரிந்ததா?

ராவ. என்னசொன்னாய், அங்கதா? உன்னை இதற்குள் கொன்றிருப்பேன். உன் தகப்பன் பொருட்டு இம்முறை உன்னை மன்னித்தேன். உன்னுடைய நலத்தை நாடியே கூறுகின்றேன் கேள். நரர்களுக்குப் பணிவிடைசெய்ய உனக்கு என்ன விதி வாய்த்தது? சிறுபிள்ளை என்பதற்கிணங்கத் தகப்பனைக் கொன்றவனிடம்நேசம்பாராட்டித் தூதாகவந்து துள்ளுகின்றாயே. தகப்பனைக் கொன்றவனைப் பழிக்குப்பழி வாங்காமல் அவனுடன் சேர்ந்து கபியின் சஞ்சலகுணத்தைக் காட்டிவிட்டாயே. உன் தந்தையின் ஆப்தநண்பனாகிய என்னிடம் உன்னை அனுப்பியதும் உன் பாக்கியந்தான்.உன்னை என் புத்ரனாகப்பாவித்து,பழிக்குப் பழிவாங்கி உன்னைக் கிஷ்கிந்தையின் சிங்காதனத்தில் உட்கார வைக்கின்றேன். நீ இங்கேயே இருந்து விடு. அங்கதா! முன் இங்கேவந்த தூதன் ஹநுமான் இருக்கின்றானா, அங்கே?

அங்க. யாரவன்? ஹனுமானென்று ஒருவனிருப்பதாகத் தெரியவில்லையே.

ப்ரஹ. முன் இங்கேவந்து செய்த சில சேஷ்டைகளுக்காக வாலைக் கொளுத்தி அனுப்பிவிட்டோமே. அந்தக் குரங்கு தன் பெயர் ஹனுமான் என்றுதான் சொல்லிற்று. வாலில்லாத ஒரு குரங்கு உங்கள் கூட்டத்திலிருப்பதாக ஒப்புக்கொள்வது உங்களுக்கு அவமானமாகத்தான் இருக்கவேண்டும்.

அங்க. இலங்கையைக் கொளுத்திவிட்டு வந்ததே அந்தக் குரங்கையா கேட்கிறீர்கள் ?

இந்திரன் மகனை எய்துமுன் தொலைத்த
இராகவன் தூதனுய்ச் சென்று
வந்தநீ அந்த வாலியின் வாலில்
வருந்திய ராவணன் மகனால்
பந்தமுற் றனையே யென்றுவா னரர்கள்
பலருமே பரிபவஞ் செய்ய
அந்தநிந் தனையால் எம்மைவிட் டோடி
அனுமனெங் கோஒளித் தனனே.

ப்ரஹ. அதுவரையில் ஸந்தோஷந்தான்.

அங். ராவணா ! என்ன பதிலுரைக்கின்றாய் ?

ராவ. வாலியின் பொருட்டு உன்னைப் புத்திரனாகப்பாவித்துக் கிஷ்கிந்தையின் அரசை உனக்கு அளிக்கின்றேன். இதுதான் பதில்.

அங். பிதற்றாதே. பாட்டியைப் பருந்துண்ணும்படி படுத்து, மாமனை மடித்து, தங்கையை மூக்கறுத்து, சகோதரனை வதைத்து, ஊரைக் கொளுத்தி இவ்வளவு செய்திருக்கும்போதும் மறைந்திருக்கும் உனக்கு ஆண்மையுமுண்டோ ? வெட்கமிருந்தால் வெளியே புறப்படு. இல்லாவிடில், ஸீதையை விட்டு விட்டு ஸ்ரீ ராகவன் பாதத்திற் பணிந்து மன்னிப்புக் கேட்டுக்கொள்.

ராவ. ப்ரஹஸ்தா ! பிடித்துக் கட்டச்சொல், இப்பயலை.

அங். பௌலஸ்த்யா ! பிழைக்கும் வழியைச் சொன்னேன். மதிகெட்ட மூடனாய்த் துன்மார்க்கனாய் அழிவதானால் உன் இஷ்டம். என்னைப் பிடித்துக்கட்ட உங்களால் முடியாது. ஆண்மையிருந்தால், நாளைக் காலையில் யுத்தத்திற்கு வந்து சேருங்கள்.

(அங்கதன் போகின்றான்.)

ராவ. மித்ரர்காள் ! நாளைத்தினம் காலையில் நாம் யுத்தத்திற்குச் சன்னத்தமாகவேண்டும். முதல்நாள் யுத்தத்திற்கு யார் போவது ?

மால்ய. ராவணா ! நான் உரைப்பதைச் சற்றுக் கவனித்துக் கேள். பரதாரசோரம் உனக்கும் உன்குலத்திற்கும் அடுத்த தர்மமல்ல. அநியாயமாய் இந்த மகதைசுவர்யத்தை யெல்லாம் போக்கிக் கொள்வது அழகல்ல.

ராவ. பாட்டா! வீண்வார்த்தை வேண்டாம். இஷ்டமிருந்தால் இருக்கலாம். இல்லாவிடில், விபீஷணனைப்போல் உண்டவீட்டிற்கு இரண்டகம் செய்யலாம். கும்பகர்ணா ! பாட்டன் பிதற்றினதைப் பார்த்தாயா ?

கும். விபீஷணனைப்போல் நானும் எதிரியுடன் சேர்வேனென்று சிறிதும் எண்ணவேண்டாம். ஆயினும்——

ராவ. ஸந்தோஷம். நாளை யாரைப் போருக்கு அனுப்பலாம் ?

கும். 'அறம் வெல்லும் பாவந் தோற்கும்' என்பார்கள். ஆகையால், தர்மத்தை யெதிர்த்துத் துன்மார்க்கர்களாகிய நாம் யுத்தம் செய்வது யுக்தமல்லவென்று எனக்குத் தோற்றுகின்றது.

ராவ. ஹா ஹா ! நீயும் இப்படியா பேசுகின்றாய் ! இனி உங்கள் முகத்தைப் பார்ப்பதே தப்பு. (ராவணன் போகின்றான்.)

---

## இரண்டாம் காட்சி

(போர்க்களம். லக்ஷ்மணன் மயக்கமாக விழுந்திருக்கின்றார். ஹனுமான் ஓர் மூலையில் பதுங்கிக்கொண்டிருக்கின்றார். ராமன், விபீஷணன், ஜாம்பவான், சுக்ரீவன், அங்கதன் முதலியோர் விசனத்துடனிருக்கிறார்கள்.)

ராம. ஐயோ, லக்ஷ்மணா !

காம்போதி ராகம் - ஆதிதாளம்.

(1) அப்பனே! ஐயனே! அரும்பிறவியே! என்தன்
அரசே! கண்மணியே ! லட்சுமணா !
எப்படிநான் உன்னைமறப்பேன்? எப்போதுன்னுடன் பிறப்பேன்?
இனிஎன் மனம் துணியேன் ; லட்சுமணா !

(2) வன்னம் ஆம் பிரம்மாஸ்திரம் கொடுத்தபிரம்மாவைப்பழி
வாங்க நீ தொடர்ந்தாயோ ? லட்சுமணா!

என்னுடன் பிறந்தகுறை உசரப்போய்த் தசரதற்கு
இயம்ப நீ நடந்தாயோ? லட்சுமணு!
(3) தந்தையையும் சடாயுவையும் கொடுத்ததும் போதாமல் உன்
தனையும் பறிகொடுத்தேனே; லட்சுமணு!
இந்தவயதினில் இந்தக்கண் காட்சிகாணநான்
என்ன உடம்பெடுத்தேன்? லட்சுமணு!
(4) அந்தோ! நான் களையாகித் தண்ணீர் விடாயெடுத்தால்
ஆர்முகத்தைப் பார்ப்பேன்? லட்சுமணு!
'இந்தாரும் காய்கனி அண்ணு!' என்றழைக்கும் உன்
இன்சொல் நான் என்று கேட்பேன்? லட்சுமணு!
(5) நேர் அறிந்தேன் வயிற்றில் காய்கனியை இட்ட நீ
நெருப்பை இட்டாயே; ஐயோ! லட்சுமணு!
ஆரையும்விட் டென்னைவிடேன் என்ருயே; என்னைக்கூட
அகலவிட்டாயோ நீ? லட்சுமணு!
(6) சோற்றிலே கல் எடுக்கறியேன் முகவணைக்கல் எடுப்பேன் என்ற
சொல்லையே நான் எடுத்தேன்; லட்சுமணு!
ஆற்றிநான் முடிபெறுமுன் வந்தவிபீஷணர்க்கு லங்கை
ஆளமுடி கொடுத்தேன்; லட்சுமணு!
(7) படிக்கும் உன் புத்திதள்ளி, உனக்கும் வானரங்களுக்கும்
பழிகாரன் ஆனேனே; லட்சுமணு!
பிடித்ததேபிடி ஆகப்பெண்வார்த்தை கொண்டு நான்
பிழைமோசம் போனேனே; லட்சுமணு!
(8) நீமாள என் உயிர்போம்; பரதற்கும் இதுகேட்கில்
நிமிஷத்தில் உயிர்போமே; லட்சுமணு!
தாய்மார்க்கும் உயிர்போமே; நான்பிறக்கச் சூரியகுலம்
தான்துலக்கம் ஆச்சே; லட்சுமணு!

கண்ணே லக்ஷ்மணு! நீயும் என்னை இக்கதியில்விட்டுச்செல்வது ந்யாயமா? உன்னைவிட்டு நான் எவ்வாறு உயிருடன் வாழ்வேன்? அரக்கர்களை அழித்து உன் அன்னையை மீட்டுக் கொடுப்பதாய் வாக்களித்து இவ்வாறு செய்வது நமது குலத்திற் கழகோ? ஐயோ! பதினன்குவருடமும் எனக்கு ஒரு கஷ்டமும் வாராமல் என்னைப் பாதுகாத்து, அயோத்தியிலே சேர்ப்பதாகச் சுமித்திராதேவியினிடம் வாக்களித்து என்னை

ஏகாங்கியாய் விட்டுச்செல்வது தர்மமா? பிதாவைத் தரிசித்து நெடுங்காலமாயிற்றென்று ப்ரஹ்மலோகம் செல்ல இச்சையிருந்தால் என்னிடம் சொல்லிவிட்டு என்னையுமல்லவோ அழைத்துச் செல்லவேண்டும். உன்னை இக்கதியில், என் கண்மணி பார்ப்பாளாகில், ஐயோ! அவள் உயிர் உடலைவிட்டு அந்த க்ஷணமே பிரிந்துவிடுமே. ஹா லக்ஷ்மணா!

(ராமன் மயக்கமாய் விழுகின்றார். சுக்ரீவன் உபசாரம் செய்கின்றான்.)

விபீ. ஜாம்பவானே! இக்கஷ்டத்திற்கு என்னசெய்வது?

ஜாம். இளையவரை உயிருடன் காண ஒரே மார்க்கந்தான் இருக்கின்றது.

விபீ. அதென்ன, சீக்கிரம் சொல்லும்?

ஜாம். மாருதி எங்கே? அவனால்தான் அவ்வேலை முடியவேண்டும்?

ஹநு. (தனக்குள்) நான் என்ன செய்வேன்? ஆனால், என்மனமொப்பி நான் ஒரு ஸ்த்ரீயையும் தொட்டதில்லை.

விபீ. (மாருதியைப் பார்க்கின்றார்.) அதோ மாருதி இருக்கின்றார்.

ஜாம். ஆஞ்சநேயா! இதென்ன இது?

ஹநு. (காலில் விழுந்து) ஐயோ! நான் ஒரு பாவமும் செய்தறியேன். தாங்களே சொல்லுங்கள், என்மீது என்னகுற்றம் என்று. ஸ்த்ரீயென்று தெரியவே தெரியாதெனக்கு.

விபீ. என்ன விசேஷம்? ஸ்த்ரீயாவது? இதெல்லாம் என்ன?

ஹநு. என்மீது குற்றம் இருந்தால் சொல்லுங்கள். ஏதோ அஸ்திரம் என்றும் அது இளையவர்மீது பாயுமென்றும் பயந்து, கண்களை மூடி அதை என் கைகளால் பொடிசெய்துவிடுவதென்று கட்டினேன். ஓர் ஸ்த்ரீயின் குரல் கேட்கக் கண்ணைத் திறந்து பார்த்தபோது, என் கரங்களின் மத்தியில் ஒரு ஸ்த்ரீ இருந்தாள். நான் என்ன செய்வேன்?

ஜாம். ஹா ஹா! என்னமோசம்! என்னமோசம்! தேவர்களே இவ்வாறு மோசஞ்செய்தாவது தம் சக்தியைக்காட்ட விரும்புகின்றார்கள் பார்த்தாயா? ஆஞ்சநேயா! உன் மீது ஓர் குற்றமும் இல்லை. நீ கட்டியது ஸ்த்ரீயல்ல. இளையவனை நோக்கி

இந்திரஜித் எய்த அஸ்திரந்தான் அது. அது உன் கையால் பொடியாகக் கூடாதென்றும், உன்னிடம் தன் பராக்கிரமம் வ்யர்த்தமாகி விடுமென்றும் எண்ணி, நீ நித்யப்ரம்மசாரி என்பதை அறிந்து, உன்னை இவ்வாறு மோசம் செய்து, இளையவன்மீது பாய்ந்துவிட்டது. அவர் சுவாசமின்றி விழுந்து கிடக்கின்றார்.

ஹநு. ஹா ஹா! எந்தத் தெய்வத்தைப் பிரார்த்தித்து அந்த அஸ்திரத்தை விடுத்தானென்று கூறும். இவ்வாறு மோசம் செய்த அத்தெய்வத்தையே அழித்துவிடுகின்றேன்.

ஜாம். நீ இவ்வாறு கோபிப்பது சரியன்று. யுத்தகளத்தில் தர்மா தர்மம் லோக நடத்தையை ஒத்திருப்பது அசாத்யம். லக்ஷ்மணன் உயிர்பெற்று எழுவதற்கு உன்னாலே ஓர் கார்யம் ஆக வேண்டும்.

ஹநு. என்ன கார்யம்? இந்திரஜித்தைக் கொன்று வரவேண்டுமா? சொல்லும், இதோ முடித்துவிட்டு வருகின்றேன்.

ஜாம். உனக்கும் உன் பிதாவுக்கும், மனத்தில் எண்ணங்கொண்ட அந்தக்ஷணமே, நினைத்த இடத்திற்கெல்லாம் செல்வதற்குச் சக்தியுண்டென்பது எல்லோர்க்கும் தெரிந்த விஷயமே.

ஹநு. அஃதெல்லாம் எதற்காக? கார்யத்தைச் சொல்லுங்கள். சக்தியற்றவர்களுக்கும் சக்தியைக்கொடுக்கும் ஸ்ரீராமநாமம்.

ஜாம். சஞ்சீவி பர்வதம் இருக்குமிடத்தை அறிவாயல்லவா?

ஹநு. கேள்விப்பட்டிருக்கின்றேன்.

ஜாம். அதிலிருக்கும் அம்ருத சஞ்சீவியை அருணோதயத்திற்குள் கொண்டுவரவேண்டும். அது வந்தால், இறந்தவர்களெல்லாரும் பிழைப்பார்கள்.

ஹநு. இதோ எடுத்து வருகின்றேன். அம்ருத சஞ்சீவியைத் தேடுவதென்றால் காலதாமதமாகும். அப்பர்வதத்தையே அரைவினாடியில் எடுத்து வருகின்றேன். (ஹனுமான் போகின்றார்.)

விபீ. சக்தியிலும் பக்தியிலும் விநயத்திலும் மாருதிக்கு ஸமானம் மாருதியேதான். அதோ எழுந்தருளியிருக்கின்றார் ரகுபதி.

(விபீஷணனும் ஜாம்பவானும் அவரிடம் போகின்றார்கள்.)

ராம. ஹா லக்ஷ்மணா! என்னைத் தனியாக விட்டு விட்டு நீ மாத்திரம் சுகமாய் ஸ்வர்க்கத்திற்குச் செல்வது உனக்கழகோ?

விபீ. வீண்துக்கமெதற்கு! ஆஞ்சநேயனும் ஜாம்பவானும் இருக்க நமக்குக் கஷ்டமென்பதும் உண்டோ?

ராம. லக்ஷ்மணன் இறந்தால், பின் லோகமென்பதும் உண்டோ?

விபீ. இவர்களிருக்க அவரெப்படி இறப்பார்? ஆஞ்சநேயர் அம்ருத சஞ்சீவியை எடுத்துவரப் போயிருக்கின்றார். அது வந்ததும் இறந்தசைனியம் முழுவதும் உயிருடன் எழுந்திருக்கும்.

ராம. லக்ஷ்மணன் உயிர்பெற்று வாய்திறந்து, என்னை அண்ணா! என்றழைப்பானோ?

ஜாம். பர்வதத்தை அதோவைத்து விட்டு மாருதிவருகின்றார்.

(ஹனுமான் வருகின்றார். லக்ஷ்மணன் நித்திரையிலிருந்து எழுந்திருப்பவன்போல் எழுந்திருக்கின்றான்.)

ராம. அப்பா, ஆஞ்சநேயா!

முன்னிற் றோன்றினோர் முறையின் நீங்கலா
என்னிற் றோன்றிய துயரின் ஈறுசேர்
மன்னிற் றோன்றினேம் முன்னம்; மாண்டுளேம்;
நின்னிற் றோன்றினேம்; நெறியிற் றோன்றினாய்!

அன்பனே! என்ன ஒன்றுஞ் சொல்லாமல், எங்கேயோ போக விரும்புவதுபோல் பார்க்கின்றாயே.

ஹநு. அந்த இந்திரஜித்தின் உயிரை வாங்கிவிட்டுத் திரும்புகின்றேன். (போகின்றார்.)

லக்ஷ். அண்ணா! யுத்தகளத்தில் என்னையும் மறந்து இவ்வாறு நித்திரை போய்விட்டதற்காக என்னை மன்னிக்கவேண்டும். எங்கே அந்த இந்திரஜித்?

ராம. குழந்தாய்! அவசரப்படாதே. நித்திரை செய்ததாக எண்ணுவது தவறு. இந்திரஜித் பிரயோகித்த அஸ்திரத்தால் மூர்ச்சித்துக் கிடந்தாய். அக்கருணாநிதியாகிய மாருதியின் உதவியால் மறுபடியும் உன்னை உயிருடன் காணப்பெற்றேன்.

லக்ஷ். அவனை நம்பியே நாம் ராவணன்மீது படையெடுத்து வந்தது. அவனில்லாவிடில் நாம் மேற்கொண்ட காரியம் வீணையாகும்.

ஸ்வாமி! அனுமதியளியும். நான் சென்று இந்திரஜித்தைக் கொன்று அவன் சிரத்தை எடுத்து வருகின்றேன்.

(ஹனுமான் வருகின்றார்.)

ஹநு. (ராமன் பாதத்தில் விழுந்து) ஹா ரகுநாதா! நாம்பட்ட கஷ்டங்களெல்லாம் வீணாயினவே! ஐயோ! இந்தக்கதி வருமென்று நான் கனவிலும் எண்ணவில்லையே!

லக்ஷ். எனக்கு உயிரளித்த உத்தமனே! இதென்ன கோலம்?

ஹநு. நாம் எப்பொருளை விரும்பி வந்தோமோ அப்பொருள் போய் விட்டது.

ராம. என்ன? என்ன?

ஹநு. அக்கொடியோன், பாதகன் இந்திரஜித் என் அன்னையின் சிரத்தை, ஐயோ! சேதித்துவிட்டானே.

(விபீஷணன் வெளியே போகின்றார்.)

ராம. ஹா கண்மணீ! உன்னைக்கண்டு களிப்பேனென்றல்லவோ இங்கு வந்தேன்! பாவி என்னைப் பதியா யடைந்ததற்குப் படமுடியாக் கஷ்டங்களை யெல்லாம் அநுபவித்தாய். இறக்குங்கால் என்னென்ன எண்ணங்களையெல்லாம் எண்ணிக் கதறினாயோ? லக்ஷ்மணா! இனி நான் எவ்வாறு உயிர் தரிப்பேன்! அப்பா! நீ அயோத்திக்குச் சென்று நான் என் கண்மணியுடன், சுகமாக, வந்த இடத்தை நோக்கிச் சென்றதாகச் சொல்.

லக்ஷ். அண்ணா! துன்பம் வந்தகாலத்தில் பிராணனை விட்டுவிடுவதா பெரிது. இதைவிட நயக்கும் நமது குலத்திற்கும் பழி வேறு என்ன இருக்கின்றது? தருமத்தையும் உலகத்தையும் பாழ்படுத்தாமல், கேவலம் கையால் ஆகாதவர்போலச் சோர்ந்து வருந்தலாமோ?

தையலைத், துணையி லாளைத், தவத்தியைத், தருமக் கற்பின்
தெய்வதந் தன்னை, மற்றுன் தேவியைத், திருவைத் தீண்டி
வெய்யவன் கொன்றான் என்றால், வேதனை யுழப்ப தின்னும்
உய்யவோ? கருணை யாலோ? தருமத்தோ டுறவு முண்டோ?

அரக்கராம், அமரராம், அந்தணராம், குருக்களாம், முனிவராம், வேதமாம் ஒருசேர நெருப்பிலிட்டு எரிக்காமல் இன்னமுமா

நாம் பார்த்துக்கொண்டிருப்பது? க்ஷணப்போதில் இந்த லங்கையைப் பொடியாக்கி, அரக்கன் போன திக்கையெல்லாம் சுட்டு வானோருலகத்தைக் கொளுத்தித் தீர்க்கவல்ல நாமா கண்ணீர்விட்டு வருந்துவது? தர்மம் தர்மம் என்று பார்த்து நாட்டை இழந்து காட்டையடைந்து, மங்கையைப் பறிகொடுத்துப் பட்டதுபோதும். மங்கையைக் கொன்றவனைக் கொன்று அவன் குலத்தையுஞ் சுட்டுப் பின் இவ்வுலகத்தையும் நாசமாக்குகின்றேன், பாரும். ஆஞ்சநேயா! எங்கே அந்தப் பாதகன்?

ஹநு. ஐயோ! அவன் லங்கையில் இல்லை. அன்னையின் உயிரை வாங்கிவிட்டு, அயோத்தியிலிருக்கும் அனைவரையும் கொன்றுவிடுவதாகச் சென்றிருக்கிறான் அந்தப் பாவி.

ராம. ஐயோ! நான் என்ன செய்வேன்!

தாதைக்கும், சடாயு வான தந்தைக்கும், தமிய ளாய
சீதைக்குங் கூற்றங் காட்டித் தவிர்ந்தில தொருவென் றீமை
பேதைப்பெண் பிறந்து பெற்ற தாயர்க்கும், பிழைப்பில் லாத
காதற்றம் பியர்க்கும், ஊர்க்கும், நாட்டிற்கும் காட்டிற் றன்றே.

ஹநு. ப்ரபோ! இதற்காகத் தமக்கு வ்யசனம் வேண்டாம். ஹநுமான் நானிருக்க அயோத்தியைப்பற்றிச் சிந்திக்கவேண்டாம். ராவணன் இந்திரஜித் எல்லோரையும் அவர்கள் எவ்வுலகம் சென்றாலும் அரைக்ஷணத்தில் தொடர்ந்து அழித்துவிடுகின்றேன். இங்கிருந்து அயோத்திக்குச் செல்வது எனக்குக் கடினமல்ல. நீங்களும் வரவேண்டுமென்று விரும்புவீராஞல் அடியேன் தோளின்மீது ஏறிக்கொள்ளுங்கள். காற்றும் பின்னடையும்படி இந்த க்ஷணத்திலேயே அயோத்திக்குச் செல்கின்றேன். பாவியாகிய அந்த இந்திரஜித் எனது அன்னையை வெட்ட வந்தபோது, நீதி கூறி விலக்க எண்ணிச் சிலவற்றைச் சொன்னேன். அக்கொடியோன் கேளாமல், ஐயோ! தான் நினைந்ததையே செய்துவிட்டான். உடனே அடியேன் துன்பத்தா லொன்றுந் தெரியாமல் கீழே விழுந்துவிட்டேன். அச்சமயத்தில் அப்பாதகன் ஓடிவிட்டான். கண்ணிற்பட்டிருந்தால் அவன் உயிரோடிருப்பனே? ஸ்வாமி! புஷ்பகஞ்

செல்வதற்குள்ளாக நாம் அயோத்திக்குச் செல்வோம். என் தோளில் ஏறிக்கொள்ளுங்கள்.

(விபீஷணன் வருகின்றான்.)

விபீ. இருக்கிறார் என்தாய். அசோகவனத்தில் ஸுகமாக இருக்கின்றார். நமக்கொரு பாக்கியம் உற்றாற்போலும், ராவணன் குடிக்கொரு சூன்யம் வைத்தாற்போலும் ஸுகமாக இருக்கின்றார் பிராட்டி. ஆஞ்சநேயன் கூறினவுடன், அவர் பார்த்தது ஏதோ மாயையாக இருக்கவேண்டுமென்றெண்ணி நேரில் காண விரும்பி இங்கிருந்து சென்றேன். என்தாய் அசோகவனத்தில் இருக்கின்றார். மாயாஸீதையை மாய்த்துவிட்டு அயோத்திக்குச் செல்வதாய்ப் போக்குக்காட்டி நிகும்பலையாகம் செய்ய ஒளிந்திருக்கின்றான் அந்த வஞ்சகன். அந்த யாகத்தை நாம் அழித்தாலன்றி, இறந்த அரக்கர்களெல்லாம் மறுபடியும் உயிர் பெற்றுத் திரும்புவார்கள். ஆகையால் உடனே புறப்படுங்கள்.

ராம. இந்த மங்கலமான செய்தியைத் தெரிவித்ததற்கு என்ன கைம்மாறு செய்யப்போகின்றேன்? ஆஞ்சநேயா! நீயும் லக்ஷ்மணனும் விபீஷணருடன் சைன்யங்களை அழைத்துக்கொண்டு சீக்கிரம் செல்லுங்கள்.

(எல்லாரும் போகிறார்கள்.)

---

## மூன்றாம் காட்சி

(அசோகவனம் ஸீதை, த்ரிஜடை.)

ஸீதை. சக்கரம்போல் சுழலும் இவ்வாழ்க்கையில், பகலும் இருளும் போல ஸுகதுக்கங்களும் மாறி மாறி வருகின்றன. கஷ்டமில்லாத ஸுகமும், ஸுகமில்லாத கஷ்டமும் உலகவாழ்க்கையில் கிடையாது. அரக்கன் கையில் அகப்பட்டு ஸகிக்கமுடியாத கஷ்டங்களை அனுபவித்ததினால் உன்னைப்போன்ற உத்தமியின் ஸ்நேகம் கிடைத்தது.

த்ரி. லோகோத்தமியின் தர்சனம் கிடைக்கப் போன ஜன்மத்தில் நான் எவ்வளவு புண்ணியம் செய்தேனோ? ஒன்றுக்கும் பற்றாத ஓர் அல்ப அரக்கஸ்த்ரீயைத் தாம் ஸமமாய்ப் பாராட்டல் சரியன்று.

ஸீதை. த்ரிஜடா! பிறப்பில் என்ன இருக்கின்றது? ஒழுக்கத்தைக் கொண்டேயன்றிப் பிறப்பைக்கொண்டதல்ல யோக்யதையும் பதவியும். அஸுரர் குலத்திலுதித்த ப்ரஹ்லாதன் பக்தர்களில் மிகச் சிறந்தவனாகக் கொண்டாடப் படவில்லையா? மனுஷ்ய சரீரமெடுத்து இன்று தெய்வமவதரித்தால் பிற்காலத்தில் தெய்வமாகக் கருதுவார்களேயன்றி மனுஷ்யனென்றுரைப்பார்களா? அம்மா திரி நீயும் உன் பிதாவும் அரக்கர் குலத்தில் உதித்தாலும் ஸாதாரணராக்ஷஸராவீர்களோ? க்ஷத்ரியகுலத்திலுதித்தும் ப்ரஹ்மருஷியாகவில்லையோ விச்வாமித்ரர்? ஐயோ! அதோ வந்துவிட்டான் அச்சண்டாளன்.

(ராவணன் வருகின்றான்.)

ராவ. த்ரிஜடா! வெளியே செல் (த்ரிஜடை போகின்றாள்.) ஜனகநந்தனி! எவ்வளவு காலம் நீ என்னை இவ்வாறு துக்கசாகர நிமக்நனாய் வைத்திருக்கப்போகின்றாய்? அக்கினியில் தள்ளிப் புருஷோத்தமனாகிய என்னை இவ்வாறு வெந்து உருமாறி, ஆப்தர்களும் அறிதற்கு அசக்தர்களாகும்படியான ஸ்திதியில் எவ்வளவுகாலந்தான் மனமிரங்காமல் வைத்திருப்பது?

தோற்பித்தீர், மதிக்கு மேனி சுடுவித்தீர், தென்றல் தூற்ற
வேர்ப்பித்தீர், வயிரத் தோளை மெலிவித்தீர், வேனில் வேளை
ஆர்ப்பித்தீர், என்னை இன்னல் அறிவித்தீர், அமரர் அச்சம்
தீர்ப்பித்தீர்; இன்னம் என்னென் செய்வித்துத் தீர்திர் அம்மா?

நான் எவ்வளவு பாதகம் செய்திருந்தாலும், இதுவரையில் பட்ட கஷ்டங்களே அவற்றை யெல்லாம் தீர்த்திருக்கவேண்டுமே! ஆனால் எவ்வளவு துக்கத்தை அடைந்திருந்தாலும், உன்னெதிரில் வந்ததும் ஓர்வித ஸந்தோஷம் எனக்குள் உண்டாகின்றது. நீ ஒரு வார்த்தை உரைத்தால் என் ஜன்மமே ஸபலமாகும். உன் கடைக்கண்ணால் ஒருதரம் கருணையுடன் பார்ப்பாயாகில் ப்ரஹ்மன் என்னைப் படைத்தது பலிதமாகும்.

(த்ரிஜடை வருகின்றாள்.)

உன்னையார் உள்ளே வரச்சொன்னது?

த்ரி. ராஜேந்திரா! மன்னிக்கவேண்டும். நம்முடைய சைன்யத்தில்

ஒருவன் திரும்பிவந்து, இங்கிருந்துசென்ற கூட்டத்தில் அவன் ஒருவன்தான் தப்பிப் பிழைத்து வந்ததாகக் கூறுகின்றான்.

ராவ. நமது கொலையாளியிடம் சொல்லி அவன் உயிரையும் வாங்கி விடச்சொல்.

த்ரி. அப்பா! இந்திரஜித்தும் இறந்துவிட்டாராம்.

ராவ. ஹா! (மயக்கமாய் விழுகின்றான். த்ரிஜடை உபசாரம் செய்ய எழுந்திருக்கிறான்.)

ஐயனே! அழக னே! என் அரும்பெற லமிழ்தே! ஆழிக்
கையனே மழுவ னேயென் றவர்வலி கடந்த கால
மொய்யனே! முளரி யன்ன நின்முகங் கண்டி லாதேன்
உய்வனே? உலக மூன்றுக் கொருவனே! செருவ லோனே!

கண்ணே! இந்திரஜித் நீயும் என்னைக் கைவிட்டாயா? சீ! இன்னமும் பொறுப்பது அசாத்யம். பேரானந்தத்தைக் கொடுக்கக் கூடிய பதவியை இவள் மூலமாய் அடைவோமென்று எண்ணி இருக்க நமக்குத் துன்பத்தையே விளைவிக்கின்றாளல்லவா! இவள் இறந்தால், பிறகாவது என் துன்பம் அதிகரிக்காமல் இருக்கலாம். (வாளை யெடுத்து வெட்டப் போகின்றான். திடீரென்று மறுமடியும் மயக்கமாக விழுகின்றான். த்ரிஜடை உபசரிக்க எழுந்திருக்கின்றாள்.) நான் எங்கே இருக்கின்றேன்? நான் கண்டதெல்லாம் கனவுதானா? த்ரிஜடா! நான் யாரையாவது வெட்டப்போனேனா?

த்ரி. ஆம், அப்பா! இம்மங்கையைத்தான் வெட்டப்போனீர்கள்.

ராவ. என்னைத் தடுத்து என் காதில் சில மொழிகளைக் கூறிய மகான் எங்கே?

த்ரி. இங்கு யாரும் வரவில்லையே.

ராவ. உனக்கு ஒன்றும் தெரியாது. இப்பொழுதுதான் எனக்கு எல்லாம் ஞாபகத்திற்கு வருகின்றது. வருவது வந்தேதீரும். தவம்செய்து வாங்கிய வரமெல்லாம் இன்றுடன் முடிந்துவிட்டதுபோலும். இன்றுதான் நினைவுக்கு வருகின்றன ப்ரஹ்மன் மொழிகள். நரர்களை ஒரு பொருட்டாக எண்ணாது அவர்களிடமிருந்து என் உயிருக்கபாயம் கூடாதென்று கேட்க மறந்ததால்,

நான் என்னைக் கொல்வானென்று கூறினாரல்லவா! ஆயினும், ஓர் அல்ப மானிடனுக்கு இவ்வளவு சக்தியேது? ஸ்ரீமந்நாராயணன்தான் இவ்வுருவம் எடுத்துவந்திருக்கவேண்டும். இனி என்னால் செய்யக்கூடிய தொன்றுமில்லை. என் சாபங்களெல்லாம் என்னைச் சூழ்ந்துகொண்டன. இக்ஷ்வாகு குலத்தைச் சேர்ந்த அநரண்யன் தன் வம்சத்தவனால் என் வம்சம் அழியுமென்று சபித்தது சரியாக முடியும்போலிருக்கின்றது. என்னால் கற்பழிக்கப்பட்ட அந்த வேதவதி என் குடிக்குக் கூற்றமாய் உதிப்பதாய்க் கூறவில்லையா! அம்மாதாசிதான் இவ்வுருவெடுத்து வந்திருக்கின்றாள் போலும். பர்வத ராஜபுத்திரி, நந்தீச்வரர், ரம்பை, வருணன் முதலியோர்களுடைய சாபங்கள் வீணாகுமோ?......ஆனால் எவரோ ஒரு ரிஷி ஏதோ என்னைச் சபித்தார். அதுமட்டும் நினைவுக்கு வரவில்லை. அதைப்பற்றி நினைக்கும்பொழுதெல்லாம் எனக்கு அளவற்ற ஆனந்தம் உண்டாகின்றது. உறவினர் எல்லாரும் உயிரை இழக்க நாம் உயிருடன் வாழ்வது சரியன்று. நாமும் யுத்தகளத்தில் உயிரை விட்டு விண்ணுலகை அடையவேண்டியதுதான். ஸ்ரீராமபக்தனும், திரிகால ஞானியும், தர்மாத்துமாவும், எனது சகோதரனுமான விபீஷணன் நம்மைக்குறித்து எள்ளும் ஜலமும் விடுவானன்றோ. அதுவே நான் கடைத்தேறுவதற்குப் போதுமானது.........ஆனால், இம்மாது என்னை மன்னித்தாலன்றி எனக்கு நற்கதியும் உண்டோ?.........ஜகன்மாதா! கடைசி முறை ஓர் விண்ணப்பம் செய்கின்றேன். தயைபுரிந்து வாய் திறந்து மறுமொழி யுரைக்கவேண்டும். இவ்வுலகினுதித்து எவ்வளவோ அக்ருத்யங்களைச் செய்தேன், கடைசியில் தம்மைச் சிறையிட்டதற்காக என்னுடைய பந்து மித்ரர்களையெல்லாம் யுத்தகளத்தில் இழந்தேன். நானும் உயிரைப் பலிகொடுக்கப் போகின்றேன். தமக்கு இந்த ஜன்மத்திலும் முன் ஜன்ம [illegible] க்காக மனமார என்[illegible] மன்னித்ததாகக் கூறுவிடில் எனது ஆத்துமா உலகு உள்ளளவும் படுநரகில் வீழ்ந்து பாழாகவேண்டியதுதான். ஆனால் தம்மு

டைய பர்த்தாவின் பாதாரவிந்தத்தில் வீழ்ந்து தம்மையும் அவரிடம் சேர்த்துவிட்டு என் உயிருடன் வாழலாகாதென்றால், இவ்வளவு உறவினர்களையும் யுத்தகளத்தில் பலி கொடுத்து விட்டு நான் யுத்தம் செய்யாமல் ஸமாதானம் செய்துகொண்டால் உலகோர் இகழ்வார்கள். யுத்தவீரனுக்கு அது அழகன்று. ஆகையால், நான் இறப்பதற்குமுன் என்னை க்ஷமித்ததாகக் கூறப் பிரார்த்திக்கிறேன்.

ஸீதை. த்ரிஜடா! ஸந்தோஷமாக மன்னித்ததாகச்சொல்.

ராவ. என் ஜன்மம் ஸபலமாயிற்று. கண்ணே த்ரிஜடா! உன் தந்தையாகிய அவ்வுத்தம விபீஷணன் அவ்வரசிளங்குமாரர்களை வெற்றிக் கோலத்துடன் அழைத்து வருங்கால், இப்பதிவ்ருதா மங்கையை, இம்மாசற்ற மாணிக்கத்தை இந்த ஜகன்மாதாவை ஸ்ரீ ராகவனிடம் சேர்த்துவிடு.

(ராவணன் நமஸ்கரித்து விட்டுப் போகின்றான்.)

---

## நான்காம் காட்சி

(யுத்தகளம். ராவணன் மரணவஸ்தையில் படுத்திருக்கின்றான். ராமன் லக்ஷ்மணன் விபீஷணன் அங்கதன் சுக்ரீவன் ஹனுமான்.)

ராவ. ரகுகுலதிலக! உத்தம புருஷர்கள் கைம்மாற்றை எதிர்பாராது உதவிபுரிவார்கள். என்னைச் சாபமென்கிற பாசத்தினின்றும் விடுவித்து, என்னுடைய புராதன தேவதாபதியை எனக்கு ஈந்ததற்காக அல்பனாகிய நான் பரமாத்மாவாகிய தமக்கு என்ன ப்ரத்யுபகாரம் செய்யமுடியும்? இங்குள்ள நீங்களனைவரும் என்னை மன்னித்ததாகக் கூறவேண்டும். பாகவதாபசாரம் மற்ற எல்லா அபசாரங்களிலும் கொடியது. நீங்கள் மன்னித்தால்தான் எனக்கு நல்லகதி கிடைக்கும். விபீஷணா! ஜகத்ரக்ஷகனையே ரக்ஷகனாயடைந்த உன்னைவிடப் பாக்கியசாலி யார் இருக்கின்றார்? ஆஞ்சநேயா! அன்னவனுக்கு அடிமை பூண்ட உன்னைவிட உத்தமன் உளனோ உலகில்? லக்ஷ்மணா! ஸீதாபதிக்குச் சகோதரனாய் அவதரித்து ஸுலக்ஷணனாகிய

உனக்கு நிகர் நீயேதான்! சுக்கிரீவா! அங்கதா! உங்கள் குலம் ரகுகுலத்தால் ரவியைப்போல் ப்ரகாசிக்கும் ஐயமின்றி! சாபத்தால் மூழ்கி துர்க்ருத்யங்களைச் செய்துகொண்டிருந்த எனக்குத் தாங்களனைவரும் சாபவிமோசனம் செய்து நற்கதியைத் தந்ததற்காக நமஸ்கரிக்கிறேன். ஜகத்ரக்ஷக! ஜகன்மாதாவாகிய ஜானகியை உம்மிடமிருந்து பிரித்து வைத்திருந்ததற்காக என்னை மன்னித்தருளவேண்டும். ஸ்வாமி! நான் இவ்வுலகில் இழைத்த பாபங்களையெல்லாம் போக்கி நீலமேகச்யாமளனாகிய நீர் எனக்கு நற்கதியை யளிக்கவேண்டும்.

ராம. புலஸ்த்யநந்தனா! நீ செய்ததென்ன இருக்கின்றது? நான் செய்ததென்ன இருக்கின்றது? எல்லாம் பரமேசன் செயல். நான் உன்னை மன்னித்தேன்.

ராவ. ராமப்ரபோ! ராமணீயகமாம் ஸீதை ராமீயமானதினால்தான் ஜகத்திற்கு விமோசனம்.

(ஆகாயத்திலிருந்து புஷ்பம் விழுகின்றது.)



PRINTED AT THE GUARDIAN PRESS, NO. 4, SEMBUDAS STREET, MADRAS.